# கம்பரின் கைவண்ணமும் சடகோபர் அந்தாதியும்





அருட்கவிஞர் அ. காசி எம்.ஏ., எம். ஏட்.,

# கம்பரின் கைவண்ணமும் சடகோபர் அந்தாதியும்



*ஆசிரியர் :*

**அருட்கவிஞர் அ. காசி எம்ஏ.எம்,எட்.,**



சுவாதி பதிப்பகம்

எண் : 13, ரெட்டி தெரு,

ஆலந்தூர், சென்னை – 600 016

தொலைபேசி : 22326662

## நூல் விளக்கக் குறிப்பு

| | | |
|---|---|---|
| நூலின் பெயர் | : | கம்பரின் கைவண்ணமும் சடகோபர் அந்தாதியும் |
| ஆசிரியர் | : | அருட்கவிஞர் அ. காசி |
| பொருள் | : | இலக்கிய ஆய்வுக் கட்டுரை |
| மொழி | : | தமிழ் |
| பதிப்பு | : | செப்டம்பர் 2010 |
| உரிமை | : | பதிப்பகத்தார்க்கு |
| நூல்கட்டு | : | சாதா |
| அச்சுத்தாள் விவரம் | : | 11.6 சேஷாயி |
| நூலின் அளவு | : | 12.5 x 18.5 கிரௌன் |
| எழுத்து | : | 12 புள்ளி |
| பக்கம் | : | 128 + XVI = 144 |
| ஒளி அச்சுக்கோவை | : | நவீன் என்டர்பிரைஸஸ்<br>ஈக்காட்டுத்தாங்கல், செ-32<br>☎: 7871725717, 9380025997 |
| அச்சிட்டோர் | : | கலர் விங்ஸ் மெட்ராஸ் பி. லிட்.<br>சென்னை - 600 005 |
| வெளியீடு | : | சுவாதி பதிப்பகம்<br>27/13, ரெட்டித்தெரு<br>(கம்பர்தெரு) ஆலந்தூர்.<br>சென்னை - 600 016.<br>தொலைபேசி : 22326662 |
| விற்பனை நிலையம் | : | 17/12, GST ரோடு,<br>ஆலந்தூர். சென்னை-16.<br>தொலைபேசி : 22326662 |

விலை : ரூ. 60/-

## பதிப்புரை

கல் தோன்றி மண் தோன்றாக் காலத்தே முன்தோன்றிய உலக மூத்த குடியாகிய தமிழர்தம் தாய்மொழியாகிய செம்மொழி தமிழ்மொழி. சங்கம் நிறுவிச் செந்தமிழை வளர்த்த செந்நாப் புலவர்கள் பாட்டின் திறத்தாலே இந்தப் பாரினைப் பாலிக்கச் செய்தவர்கள். "பாட்டினைப்போல ஆச்சரியம் பாரின் மிசை இல்லையடா" என்று வியந்தான் பாரதி.

சங்கம் கண்ட புலவர்கள் வெண்பா, ஆசிரியப்பா, கலிப்பா, வஞ்சிப்பா என நால்வகை பாக்களால் நல்லிலக்கியம் படைத்தனர். காலமாற்றத்தால் பாவில் இருந்து பாவினங்கள் தோன்றி பின் காப்பியங்கள், சைவ வைணவ இறைவழி பாடல்கள், எனப்பாட்டின் வகை விரிந்தன. சற்றேறக்குறைய ஐந்தாம் நூற்றாண்டு தொடங்கி தமிழில் 96 வகை பிரபந்தங்கள் மலர்ந்தன. பிரபந்தம் என்னும் சொல்லுக்கு நன்கு புனையப்பட்டது அல்லது கட்டப்பட்டது என்று பொருள். பாடல்கள் மக்கள் நெஞ்சில் பதிய, அதன் ஓசை (இசை) துணைபுரிந்தன. மேலும் அவற்றை நினைவில் நிறுத்திக் கொள்ளவும் தொடர்ச்சி விடாமல் இருந்தவும் பாடல்கள் ஒருபொருளின் மேல் பத்து நூறு என்று அடுக்கிச் செல்லும்போது ஒவ்வொரு பாட்டின் இறுதிச் சொல் அடுத்து வரும் பாட்டின் முதற்சொல்லாக வைத்துப் பாடுவது அந்தாதியாகும்.

அந்தாதி, அந்தம் + ஆதி = அந்தம் = இறுதி. ஆதி = முதல் எனப் பொருள்படும். ஒருநாளின் முடிவை அந்தி என்று சொல்கிறோம். வயது முதிர்ச்சியை அந்திமக்காலம் என்பர்.

தொல்காப்பிய நூற்பா உரையில் விருந்துக்கு எடுத்துக் காட்டாகப் பொய்கையாரின் திருவந்தாதியை எடுத்துக் காட்டுவார் நச்சினார்க்கினியர். அந்தாதியின் முதல் இலக்கியமாக விளங்கியது பொய்கையாரின் முதல் திருவந்தாதியேயாகும். கி.பி. 6, 7ம் நூற்றாண்டு முதல் நேற்று வரை அந்தாதி என்ற பெயரில் ஏறக்குறைய 867 அந்தாதிகள் வந்துள்ளன. தொடக்கக் காலத்தில் எழுந்த அந்தாதி நூல்கள் பெரிதும் வெண்பாவில் வெளிப்பட்டன. மொழி வளர்ச்சியும் சொற்பெருக்கமும், புலமைத் திறமும் கூடக் கூடப் பா இனங்களாகிய விருத்தம், கட்டளைக் கலித்துறை முதலியனவும் இடம்பெற்று வளர்ந்தன. அந்தாதியின் அமைப்பும், பாடு பொருளும் பெருகப் பெருகப் பதிற்றுப் பத்தாதி, யமக அந்தாதி, திரிபந்தாதி, சிலேடை அந்தாதி, நிரோட்டயமக அந்தாதி எனப் பல்வேறு நிலைகளில் அந்தாதிகள் பெருகின. இவற்றுக்கெல்லாம் பின்னர் இலக்கணமும் தோன்றின.

சடகோபர் அந்தாதி நூறு கட்டளைக் கலித்துறைப் பாடல்களால் ஆன நூற்றந்தாதி ஆகும். இவ் அந்தாதி ஒரு பொருள்மேல் நடத்தலின் இது பொருள்

*நன்றி: சடகோபர் அந்தாதி டாக்டர் ஜெகத்ரட்சகன்

தொடர்நிலை அந்தாதி வகைப்படும். நெடுக ஒரு கதையாக இல்லாமல் சடகோபர் மீதும், அவரின் ஆயிரம் பாடல்களின் அருமை பெருமை பற்றியும் செய்யப் பட்ட பாட்டாதலால் சொற்றொடர் நிலையாகவும் கொள்ளலாம்.

*சமய இலக்கியங்களில் வைணவ, சைவ, இசுலாமிய, கிருத்துவ இலக்கியங்களும் உள்ளன. இவற்றுள் வைணவத்திற்கு மட்டும் பல்வகையான அந்தாதிகள் 87 உள்ளன.

நாலாயிரத் திவ்வியப்பிரபந்தத்தில் பெரும் பகுதி பாடல்கள் அந்தாதிகளே. இவ்வந்தாதி வகையில் வேறு எந்தச் சமய பெருநூலும் இல்லை எனலாம்.

மயர்வற மதிநலம் அருளப் பெற்றவர்கள் தாம் ஏற்றமிகு ஆழ்வார்கள். அவர்களுள் ஒருவர் நம்மாழ்வார். அவரே சீரார் சடகோபர், திருவழுதி நாடென்னும் தென்குருகூரில் தோன்றி ஆன்ற திருமறைகள் ஆயிரமும் ஈன்ற அன்பெர் அவரை:

மிக்க இறைநிலையும் மெய்யாம் உயிர்நிலையும்
தக்க நெறியும் தடையாகித் - தொக்கியலும்
ஊழ்வினையும் வாழ்வினையும் ஓதும் குருகையர்கோன்
யாழின் இசை வேதத்து இயல்

எனும் ஒரு தனிப்பாடல்

பெற்றும் உய்யும் வகையறியாது அறியாமையிலும் வெற்றாரவாரப் பற்றுகள் நிறைந்த உலகியலில் சிக்கி, அற்ப இன்பங்களில் ஆசை கொண்டு ஆறாத் துயரத்திற்கு ஆளாகி, மெய்யறிவுப் பேரின்பப் பொருளாகிய தன்னை மறந்து அனலிடைப் புழுவைப் போல அல்லல்படும் மாந்தரைக் காத்தருளத் திருவுளங் கொண்ட திரு. நாராயணன், வைகுந்தத்தில் கருடாழ் வாரையும் அனந்தாழ் வாரையும் நோக்கி, "நீங்கள் இருவரும் முன்னதாக நிலவுலகில் திருக்கோளூரில் மதுரகவியாகவும், திருக்குருகூரில் திருப்புளி மரமாகவும் தோன்றுங்கள்; எனது கௌஸ்துப மதாணி அம்சமாகவும் விஷ்வக் சேனர் அம்சமாகவும் திருக்குருகூரில் காரிமாறனுக்கும் அவன் மனைவி உடைய நங்கைக்கும் திருக் குமாரனாகச் சடகோபரை அவதரிக்கச் செய்கின்றோம்" என்று திருவாய் மலர்ந்தருளினார்.

திருமால் திருவுள்ளப்படி அனந்தாழ்வார், யுக வருடம், ஆனி மாதம், மூல நட்சத்திரத்தில் தமிழ்நாட்டின் தென்கோடியில் திருநெல்வேலி சீமை திருக்குருகூரில் ஆதிபிரான் சந்நிதிக்கு வடபுறத்தில் திருப்புளியாகத் தோன்றி, மிகவும் விரைவில் பசுமையாகவும் பாரித்தும் வளர்ந்திருந்தார்.

பரந்தாமன் திருவுள்ளப்படியே திருக்குருகூர் நகரை அரசு புரியும் காரிமாறன் பக்தனாயும், ப்ாகவதத் தொண்டில் மிக்க ஈடுபாடு உடையவனாயும்

விளங்கினான். அவன் மனம் கோணாது பணிவிடை செய்யும் மனைவி உடையநங்கை. வெகுகாலமாகப் பிள்ளைப்பேறு இல்லாதிருந்த அந்தக் கணவன் மனைவியும் அடிக்கடி ஆதிபிரான் சந்நிதிக்குச் சென்று அகமுருகி வணங்கி வந்தனர். எம்பெருமானுக்கும் பல பணிவிடைகளையும் குறைவின்றிச் செய்துவரும் சமயம் திருமால் அவர்கள் கனவில் தோன்றி, "விரைவில் எனது கூறாக நன்மகன் ஒருவன் பிறப்பான்" எனத் திருவாய் மலர்ந்தருளினார். அவ்வண்ணமே உலகில் அறியாமை இருள் நீங்கி மெய் ஒளி பரவவும், வடமொழியில் மறை பொருளாக இருக்கும் நான்கு வேதங்களின் சாரத்தையும் தமிழுலகம் அறிந்துணர்ந்து. மானுட கோடிகள் கடைத்தேறவும் உடையநங்கை, திருவயிற்றில் கலியுகம். 43-ஆம் நாள், பிரம்மாதி ஆண்டு, வைகாசி மாதம் 12-ஆம் நாள் வெள்ளிக்கிழமை, விசாக நட்சத்திரம், கடக இலக்கினத்தில் சேனர் கூறாய், பிறந்தார் நம்மாழ்வார்.

மகன் பிறந்த நற்செய்தி கேட்ட அரசன் அளவிலா மகிழ்ச்சி அடைந்தவனாய் அறங்கள் பல செய்து குழந்தைக்குக் காரிமாறன் என்று பெயரிட்டான். கதிரவன் ஒளி போன்ற திருமேனி கொண்ட அக் குழந்தை கண்களைத் திறக்காமலும் பால் உண்ணாமலும் வாய் திறந்து அழாமலும் அசைவற்று செயலற்று இருந்ததைக் கண்ட அரசன் பெரு வியப்பும் வேதனையும் அடைந்தான், இதை அமைச்சர்களுக்கும் மற்றவர் களுக்கும் அறிவித்துப் பின்னர், அக் குழந்தையை ஒரு

தொட்டிலில் வைத்து ஆதிப்பிரான் சந்நிதியின் முன் வைத்து எம்பிரானைப் பற்பலவாறு போற்றி வணங்கி நின்றான். தொட்டிலில் செயலற்று அமைதி நிலையில் இருந்த அக்குழந்தை மெதுவாகத் தவழ்ந்தபடியே சென்று சந்நிதியின் வட புறத்திலிருக்கும் திருப்புளியின் கீழ் தவ நிலையில் உட்கார்ந்து கொண்டதைக் கண்ட பெற்றோரும் மற்றோரும் பெருவியப்படைந்து, "இது ஒரு தெய்வீகக் குழந்தை!" என நினைத்துப் பற்பலவாறு புகழ்ந்து பேசினர். இங்ஙனம் பதினாறு வருடங்கள் அன்ன ஆகாரமின்றிப், பேச்சு மூச்சுமின்றி யோகன நிலையில் இருந்தது அக் குழந்தை.

திரு நாராயணன் ஆணைப்படி கருடாழ்வார் ஈசுவர வருடம் சித்திரை மாதம், சுக்கில பட்சம் வெள்ளிக்கிழமை கூடிய சித்திரை நட்சத்திரத்தில் தமிழ் நாட்டின் தென் கோடியில் திருநெல்வேலி மாவட்டத்தில் திருக்கோளூரில் வைணவ பிராமணருக்குத் திருக்குமாரனாகப் பிறந்து, மதுரகவியெனப் பெயர் சூட்டப்பட்டார். தக்க வயதடைந்ததும் முப்புரிநூலும் கல்விப் பயிற்சியும் செய்யப்பட்டு, பல கலைகளையும் கற்றுணர்ந்தார். பின்னர் திருக் கோயில்களைக் கண்டின்புறும் பொருட்டு வடதேய மெங்குமுள்ள புண்ணியத் தலங்கள் பலவற்றிற்கும் சென்று தரிசித்துக் கொண்டு அயோத்தியை அடைந்தார்.

அங்குச் சக்ரவர்த்தித் திருமகன் இராமபிரானைத் தரிசித்த பின்னர் மாலைப்போதில் தென் திசையை நோக்கிப் பார்க்குங்கால் என்றும் காணாத புதியதொரு

ஒளியைக்கண்டு பெருவியப்பு அடைந்தார். மீண்டும் விரைவாகத் தென் திசையை நோக்கிப் பார்க்கும் போது, அதே ஒளி காணப்படுவதைக் கண்டு வியப்புற்றார். அதன்பின், திருவேங்கடம், திருவரங்கம் திருமாலிருஞ் சோலை, திருவில்லிபுதூர் முதலிய திருப்பதிகளைத் தரிசித்துக் கொண்டு திருக்குருகூர் அடைந்து போது, அந்த ஒளி ஆதிப்பிரான் திருக்கோயிலுக்குள் சென்று வட புறத்திலிருந்த திருப்புளியில் மறைந்தது கண்டார், மதுரகவியார். அங்குத் திருப்புளியின் கீழ் இளம்பரிதியைப் போன்ற உருவமுடைய ஒருவர் கண்களை மூடிக் கொண்டு ஆழ்ந்த தவநிலையிலிருப் பதையும், அவரருகில் பெருங்கூட்டம் கூடி வணங்கு வதையும் கண்டு காரணம் என்னவென்பதைக் கேட்டறிந்து வியப்புற்றார்.

"இவர் ஒரு மகா யோகி; இவரை புகலடைந்து நம் ஆசை, பற்றுகளைத் துடைத்துக் கடைத்தேற வேண்டும்" என்னும் எண்ணத்துடன் அவரை வலம் வந்து கைக் கூப்பி வணங்கி நின்றார். இனியும் இவர்யோக நிலையிலிருந்து விழித்திருப்பாரோ, மாட்டாரோ என்னும் ஐயத்துடன் ஒரு கல்லை எடுத்து அவர் அருகில் வீச அவர் கண் திறந்தார். அது கண்ட மதுரகவியார், மிக்க மகிழ்ச்சி யுற்றவராய் மேலும் அவர் பேசுவாரோ,பேச மாட்டாரோ வென்பதைச் சோதிக்க எண்ணினார். "துறவியே! செத்தத்தின் வயிற்றில் சிறியது பிறந்தால் எத்தைத் தின்று எங்கே கிடக்கும்?" என்று வினவினார்.

பதினாறு வருடங்களாகத் தவத்தில் மூழ்கியிருந்த மாறப் பெருமான் கண்களைத் திறந்து மதுரகவியாரை நோக்கி அருள் புரிந்து,"அத்தைத் தின்று அங்கே கிடக்கும்"எனத் திருவாய் மலர்ந்தருளினார். அதைக் கேட்ட மதுரகவியார் தாம் கேட்ட மெய்ப் பொருளுக்கு மிகவும் இனிமையாகவும் தெளிவாகவும் பதில் கிடைத்ததைக் கண்டு அளவிலா மகிழ்ச்சி அடைந்தார். "இவர் வெற்று மனிதரல்லர்; மண்ணுலகத்தோரை உய்விக்க வந்த விண்ணுலக விளக்கே!: என ஊகித்துணர்ந்தார். மீண்டும் அவர் திருவடிமலர்களில் வீழ்ந்து வணங்கி, அவர் திருமுகத்தை நோக்கி வண்ணம்,"வாடி நிற்கும் செந்நெற் பயிர்கள் மழை நீரைக் கண்டது" போல அவரது அமுத மொழிகளைப் பக்தியுடன் எதிர்பார்த்திருந்தார்.

மண்ணில் தோன்றிய நான் முதல் தவக்கோலத்துடன் விளங்கும் தன் பக்தனை மேலும் சோதனை செய்ய விரும்பாமல் ஆட்கொள்பவனாகிய அருளாளன் வாகனமேறிக் காட்சி தந்து கருணை புரிந்து மயர்வற மதிநலம் அருளி, தொல்லைகள் நிறைந்த துயரக் க்டலில் இருந்து மானுடக் கோடிகளைக் கரையேற்றிப் பேரின்ப வெள்ளமாகிய பொன்னுலகத்திற்கு வழிகாட்டும் மெய்யறிவுச் செல்வத்தை இனிய தமிழில் புரியுமாறு ஆழ்வாருக்கு ஆணையிட்டார்.

எம்பெருமான் பேரருளிலும் ஆழ்ந்திருந்த ஆழ்வார், கிடைத்தற்கரிய திருமாலின் திருமேனிகாட்சி கண்டு பெருமகிழ் வடைந்து அவர் திருவடிகளில் விழுந்து வணங்கினார். அரன், அயன், விண்ணவர் கோன் மற்றும் மாதவ முனிவர்களும் காணக் கிடைக்காத மாபெரும் பேற்றை அடைந்ததைக் கண்டு பற்பலவாறு ஏத்திதொழுதார்.

எம்பெருமான் திருவுள்ளப்படியே,"புலையாம் பிறவி பெற்றுப் பொய்யுலக இன்பங்களில் சிக்கிப் புகலரும் பேரின்பப் பொருளைக் காணும் வழி யறியாது பிறவிப் பெருங்கடலில் தவிக்கும் மானுடக் கோடிகளைக் கடைத்தேற்றிக் காத்தருளும் கருணையங்கடல் கண்ணனே பரம்பொருள் என்றும், இவ் உடல் அழிவதற்கு முன் வேறொன்றிலும் பற்றுக் கொள்ளாமல் நித்தியமும் நிர்மலமுமாகிய அப் பரம்பொருளையே புகல் எனப் பற்றினால், நம்மை அனைத்து வினைகளிலிருந்தும் கரையேற்றிக் காத்தருளவல்ல கருணையங் கடல்" என வெள்ளிடை மலைபோல் விளக்கியும், வேதம் அனைத்துக்கும் வித்தாகிய ஆதிமூலக் கடவுளின் எல்லையற்ற நற்குணங்கள்யும் அடியார்கள் துயரகற்ற இம் மண்ணுலகில் புரிந்த திருச்செயல்களையும் திருவிருத்தும், திருவாசிரியம்,பெரிய திருவந்தாதி, திருவாய்மொழி ஆகிய நான்கு திவ்யப் பிரபந்தங்களில் 1102 பாடல்களைத் திருவாய் மலர்ந்து அருளியதோடு;

மற்ற திவ்வியதேசங்களின் அர்ச்சாமூர்த்திகளையும் மங்களாசாசனம் செய்தருளினார்.அவற்றைப் பெரும் பேறாகக் கருதி மிகவும் பக்தியுடன் மதுரகவி ஆழ்வார் ஏடு கொண்டு எழுதி, இவ் உலக மாந்தர் உய்யும் வகையை அருளிப் புனிதரானார். மாறப்பெருமான் மகிழ்ந்தருளிய திவ்ய பிரபந்தங்களில் அடங்கியுள்ள அரும்பெரும் பாடல்களையும்,பரந்தாமனின் திரு விளையாடல்களையும் மனமுருகப் பாடியாடி உள்ளங் களித்திருந்தார்.

திரு நாராயணன் நம்மாழ்வாருக்குக் காட்சி தந்தருளிய செய்தியும் நான்கு வேதங்களின் சாரத்தையும் நான்கு திவ்வியப் பிரபந்தங்களின் மூலமாக, எம்பெருமான் அரும்பெரும் அவதார குண இயல்புகளும் ஈடு இணையற்ற முறையில் திருவாய் மலர்ந்தருளிய நம்மாழ்வாரின் பெருமையும் வையகமெங்கும் பரவலாயின. பிறக்கும் போதே 'சடம்' என்னும், வாயுவைத் தடுத்து வென்று உலகப் பற்றுகளிலிருந்தும் விடுதலை பெற்றதால் சடகோபர் என்றும்; உண்ணுவது, உறங்குவது, அழுவது ஆகிய உலக இயல்புக்கு மாறாக எத்ததைய பேச்சும் அசைவுமின்றி மனித இயல்புக்கு மாறுபட்டு இருந்தால் மாறன் என்றும்; பொலிந்துநின்ற பெருமானால் அருளப்பட்ட மகிழம் பூவாகிய வகுளமாலையைச் சூடிக் கெண்டதனால் வகுளாபரணர் என்றும்; இதர சமயங்களைத் தெரிந்தமையால் பராங்குசர்

என்றும்; மற்றெல்லா ஆழ்வார்களிலும் இவ்வாழ்வாரை எம்பெருமான் சிறப்பாகக் கருதியதால் இவருக்கு நம்மாழ்வார் என்றும் திருநாமங்கள் வழங்கலாயின.

இவ்வாறு 35 வருட காலம் நம்மாழ்வார் தன் அருமைத் தொண்டன் மதுரகவியுடன் திருப்புளியின்கண் திருமாலின் திருவடித் தாமரையில் ஆழ்ந்த ஈடுபாடு பொண்டிருக்கும்போது, மண்ணுலக வாழ்வில் வெறுப்புற்றவராய்த் தன்னைப் பிறவிக் கடலிலிருந்து கரையேற்றிப் பரமபதத்தை அருள வேண்டுமென்று எம்பொமானை நோக்கி அகமுருகி வேண்டினார். ஆழ்வாரின் வேண்டுகோளுக்கிணங்கி எம்பெருமான், "ஆழ்வார்கள் தலைவனே! எம் ஆணையின்`படி மண்ணுலகில் தோன்றிய நீர் ஆற்றவேண்டிய கடமைகளை ஏற்றமான முறையில் செய்து முடித்தது பற்றி நாம் மிக மகிழ்கின்றோம். இனி நீா எண்ணியபடியே விண்ணுலகடைந்து எம்முடன் வாழ்வீராக!" என்று பணித்தருளினார். நம்மாழ்வார் பிரிவைக் கண்டு ஆற்றொணாத் துயரங்கொண்ட மதுரகவியார் சடகோபரைப் பணிந்து தம்மையும் ஏற்றுக் கொண்டருளும்படி வணங்கி நின்றார்.

திருமறையவன் மதுரகவியாரைத் தேற்றி, "அடியவர் பணி புரியம் பெருந்தகையே! கலங்க வேண்டா. நீர் இனியும் சில காலம் இத் திருப்புளியின் கிழ் நம்மாழ்வாரைத் திரு உருவாய் எழுந்தருளச் செய்து

நாள்தோறும் திருமஞ்சனமும் திருவாரதனமும் செய்து கொண்டும், காலந்தோறும் தவறாமல் திருவிழாக்கள் நடத்திக் கொண்டும் திவ்யப் பிரபந்தங்களையெல்லாம் முறைப்படி ஓதிக்கொண்டும் மானுட கோடிகள் அறிந்துணரும் பொருட்டுப் பாரெங்கும் பரப்பி வைத்தபின் விண்ணுலகம் அடைவீராக!" என்று திருவாய் மலர்ந்தருளி நம்மாழ்வாருடன் வைகுந்த மடைந்தார்.

ஆண்டவன் ஆணையைத் தலைமேற் கொண்டு மதுரகவி ஆழ்வார், தன் ஆசாரியன் சடகோபன் மங்கலத் திருமேனியை நிறுவி ஒழிவில்லாக் காலமெல்லாம் குறையில்லாத தெய்வப் பணிகளைச் செய்தும்,திவ்யப் பிரபந்தங்களைப் பாடியும், பாடச்செய்தும் பாருலகமெங்கும் பரப்பியும் தொண்டுடைய சீலராய்ப் பல காலம் வாழ்ந்து பின்னர் வீடு பேறடைந்து தன் ஆசாரியனை அடைந்து இன்புற்றிருந்தார்.

ஆண்டவனிடத்தும் அடியவர்களிடத்தும் கொள்ளும் அன்பை - ஆர்வத்தை பக்தி என்பர். அதாவது இரண்டறக் கலந்து நிற்றல், கம்பன் சடகோபரிடம் எப்படி இணைந்து பிணைந்து ஒன்றியுள்ளான் என்பதை இந்நூலின் பின் இணைப்பில் உள்ள, ஒவ்வொரு பாட்டும் முன்மொழியும், தாரளமான மனத்திலே அன்பு என்பது நன்றியிலே கலந்துவிடுகிறது. கம்பன் நம்மாழ்வார்க்கு எவ்வளவு கடன்பட்டுள்ளான் என்பதை இந்நூலிலே பரக்கக் காணலாம்.

கவிச்சக்கரவர்த்தி என்று சொல்லப்படுகின்ற சொற்களுக்குப் பொருளாய விளங்கும் கம்பனைத் தெய்வமாக் கவி என்பதே சாலும். அதற்குத் தகுந்தவன் கம்பன். ஒரு சொல்லாலும், அடியாலும், தொடராலும், ஒரு பாட்டாலும் நம்முடைய ஆத்மாவை உயர்த்துகிறான், பயன்படுத்துகிறான் கம்பன். தனது வாழ்வு முழுவதுமே கவிதையின் நீண்ட பயணத்தில் பயணமாகிற கம்பன் காவியத்தில் காண்கிறவர்கள், சடகோபர் அந்தாதியிலும் காணலாம். இராமனிடம் காட்டும் அன்பு, ஆதரவு, நம்பிக்கை நம்மாழ் வாரிடத்திலேயும் காட்டியதன் எதிரொலி இந்நூல் என்பது புலப்படும்.

கம்பர் கைவண்ணமும் சடகோபர் அந்தாதியும் என்னும் இந்த அரிய நூலைக் கம்பராமாயணத்திலும் தமிழ் இலக்கியங்களிலும் ஆழக் கால்பதித்த தமிழறிஞர் அருட்கவிஞர், பெரும்புலவர் அ.காசி அவர்கள் எட்டு சிறந்த ஆய்வு கட்டுரைகளின் வாயிலாகப் பல அரிய கருத்துகளைத் தமிழ் நெஞ்சங்களுக்கு விருந்தாக்கி யுள்ளார்.

இவ்வரிய நூலை வாங்கிப் படித்துப் பயனடையு மாறு தமிழ் ஆர்வலர்களை வேண்டுகிறேன்.

அன்பன்
வரத கோவிந்தராசன்

**அருட்கவிஞர் காசி, எம்.ஏ.,**
அருப்புக்கோட்டை.



## என்னுரை

கம்பர் இராமகாதையை அரங்கேற்றுவதற்கு முன் சடகோபர் அந்தாதியைப் பாடி அரங்கேற்றம் செய்ய வேண்டிய நிலை ஏற்பட்டது. அதன் காரணத்தை இந் நூலின் முதற்கண் சுட்டியுள்ளேன்.

கம்பராமாயணத்திற்கு முன்பாகக் கம்பர் அரங்கேற்றிய சடகோபர் அந்தாதியின் பெருமையை விளக்குவதே இந் நூலின் நோக்கமாகும்.

சடகோபர் யார்? அவருக்கு அப்பெயர் ஏற்படக் காரணம் யாது? நம்மாழ்வாருடைய வரலாறு யாது?

நம்மாழ்வார் பாடிய திருவிருத்தம் திருவாசிரியம், பெரிய திருவந்தாதி, திருவாய்மொழி ஆகிய நான்கு பிரபந்தங்களின் கருத்துச் செறிவு, சடகோபர் அந்தாதியில் எவ்வாறு இடம் பெற்றுள்ளது?

மற்றும் சடகோபர் அந்தாதியில் அடங்கிய கலை, கற்புச் சுவைகள் – மதுர கவியார் வரலாறு, அவர் இயற்றிய நூலின் பெருமை – இவையெல்லாம் ஒருங்கு திரண்ட கருத்துப் பெட்டகமே இந்நூலாகும். கம்பரின் தனித் திறமைக்குச் சடகோபர் அந்தாதி சரியான எடுத்துக் காட்டாகும்.

இராமபிரானோடு தொண்டு செய்வதை விட இராம நாமத்தைத் துதித்தலால் ஏற்படும் பயன்களைக் கம்பராமா யணத்தில் பல இடங்களில் காணுகிறோம்.

கம்பருடைய இராமகாதையின் பாத்திரங்களில், கம்பரால் படைக்கப்படாமல் ஒரு பாத்திரம் தானே முன் வந்து உதவி செய்கிறது. அப்பாத்திரமே கருடபகவான் ஆவார். உரிய காலத்தில் தன்னலமின்றித் தானே இராம பிரான் முன் தோன்றி, இராமநாமத்தைத் துதித்துப் பறந்து சென்று நாகபாசத்தை அழித்துத் தன்னலங்கருதாமல் தொண்டு செய்து தனதிருப்பிடம் செல்வதைக் காணு கிறோம்.

கம்பர் தான் கற்ற குருவான சதுரானனப் பண்டி தரின் மகள் நிகர்த்தவல்லியைத் திருமணம் செய்து கொண்ட நிகழ்ச்சியையும் இந்நூலில் ஒரு பகுதியாகத் தந்துள்ளேன்.

கம்பர் கண்ட அகத்தியர் என்ற பகுதியில் பல இலக்கியங்களில் அகத்தியர் பெருமையை ஒப்பீடு செய்து தந்துள்ளேன்.

இந்நூல் எனது 55 ஆவது படைப்பாகும். இந்நூ லுக்குப் பதிப்புரை நல்கிச் சிறப்பித்துள்ள கவிஞர் வரத கோவிந்தராசனார், எம்.ஏ. அவர்களுக்கும், அருள்நெறிக் கவிஞர் என்று பாராட்டி மதிப்புரை நல்கிய பேராசிரியர் தா.கு. சுப்பிரமணியன், எம்.ஏ., அவர்களுக்கும், அணிந் துரை நல்கிய மதுரை வழக்கறிஞர் திரு.ஆர். செல்லை யா அவர்களுக்கும், வாழ்த்துரை நல்கிய அருப்புக் கோட்டை கம்பன் கழகத் தலைவர் திரு.டி.ஆர். தினக ரன், பி.இ., அவர்களுக்கும், என் உளங்கனிந்த நன்றி யைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

வணக்கம்.



ஆர். செல்லையா, பி.ஏ.பி.எல்.,
வழக்கறிஞர், H 820, எல்லிஸ் நகர்,
மதுரை – 625 010.
தொ.பே.: 2300382.

# அணிந்துரை

நான் சென்ற ஆண்டு மதுரையில் ஓர் இடத்தில் கம்ப இராமாயணச் சொற்பொழிவு ஆற்ற சென்றேன். தலைமை வகித்தவர் தமிழ்ப்புலவர். முன்னுரையாகக் கம்பன் வாழ்வில் நடந்த பல நிகழ்வுகளைச் சுவைபடச் சொன்னார். அதைக் கேட்டு நான் ஆச்சரியப்பட்டேன்; இந்த நிகழ்வுகளையெல்லாம் எங்கோ படித்தது போல் எனக்குப் பட்டது.

நமது அருப்புக்கோட்டை அருட்கவி.அ. காசி அவர்கள் எழுதிய 'கவிச்சக்கரவர்த்தி கம்பன்' என்ற நூலிலிருந்து அந்தப் புலவர் தொகுத்துச் சொன்னது தெரிய வந்தது. எப்படி இதை நான் சரியாக யூகிக்க முடிந்தது என்றால், இரண்டு வருடத்திற்கு முன் அருப்புக்கோட்டை 'கம்பன் கழகத்தில்' 'கம்பன் கண்ட பிரகலாதன்' என்ற பொருள் பற்றிச் சொற்பொழிவாற்றினேன். அன்றுதான் நமது அருட்கவி காசி அவர்கள் 'கவிச்சக்கரவர்த்தி கம்பன்' என்னும் நூலை அதே கம்பன் கழகத்தில் வெளியிட்டார்கள்.

அப்படி அருட்கவியின் நூல்கள் அருப்புக்கோட்டையோடு நின்றுவிடவில்லை. அருப்புக் கோட்டையைத் தாண்டி சங்கம் வளர்த்த மதுரைக்கும் வந்துவிட்டது. மதுரையிலுள்ளவர்களுக்கும் அவரது நூல்கள் பயன்படுகின்றன.

அந்தக் 'கவிச்சக்கரவர்த்தி கம்பன்' என்ற நூலை வெளியிட்ட பொழுதுதான் புலவர் காசி அவர்களை முதன் முதலாகப் பார்த்தேன். அப்பொழுதே அவர்கள் 50 நூற்களை வெளியிட்டு விட்டார்கள். இவரா இவ்வளவு நூல்களையும் வெளியிட்டவர் என்று மிகுந்த ஆச்சரியப் பட்டேன். ஏனெனில் அவர் தோற்றத்திற்கும் அவர் சாதித்த சாதனைகளுக்கும் எந்தச் சம்பந்தமுமில்லை.

ஒருவர் எழுதிய சிறுகதை முதன் முதலில் ஒரு பத்திரிகையில் வந்தது. அவர் உடனே அதுபற்றித் தன் நண்பர்களுக்கும் உறவினர்களுக்கும் கடிதம் வாயிலாகவும், தொலைபேசி மூலமாகவும் தொடர்ந்து பல நாட்கள் தெரி வித்துக் கொண்டே இருந்தார்.

இரண்டு அல்லது மூன்று புத்தகங்களை எழுதி விட்டால் போதும். அவர்கள் நடை, உடை, பாவனை எல்லாமே அடியோடு மாறிவிடுவதைப் பார்க்கலாம்.

ஆனால் நமது அருட்கவி அ. காசி அவர்கள் 50 புத் தகங்களை எழுதி வெளியிட்டுவிட்டு மிகவும் அமைதி யாக இருக்கிறார்.

புத்தகம் எழுதுவது சாதாரண காரியமல்ல. ஒரு பக்கம் எழுதுவதற்குப் பல நாட்கள் நூலகத்தில் நேரத்தைச் செலவிட வேண்டும். 50 புத்தகங்களை எழுதுவதற்கு அவர் நூலகத்தில் எவ்வளவு மாதங்கள் – ஏன் எவ்வளவு வருடங்களைச் செலவு செய்திருக்க வேண்டும்; எவ்வளவு ஊக்கமும் விடாமுயற்சியும் இருந்திருக்க வேண்டும்.

புத்தகங்களை எப்படியோ எழுதிவிடலாம், ஆனால் அதை வெளியிடுவதற்குள் போதும், போதும் என்று ஆகிவிடும். 50 புத்தகங்களை வெளியிடுவற்கு நமது அருட்கவி எவ்வளவு சிரமப்பட்டாரோ!

இதில் ஒரு வேடிக்கை என்னவென்றால் ஆசிரியர் தொழிலைவிட்டு ஓய்வு பெற்ற பிறகு, அவர் சும்மா இல்லை. அருப்புக்கோட்டை கம்பன் கழகத்தில் அவர் தான் செயலர். தொடர்ந்து அந்தப் பணியைச் சிறப்பாகச் செய்து வருகிறார். அதுமட்டுமல்ல, 'அமிர்தலிங்கேஸ்வரர்' கோவிலில் வருடம் முழுவதும் நடைபெறும் சகல விழாக்களின் பொறுப்புக்களை ஏற்றுத் திறம்பட நடத்தி வருகிறார்.

ஒன்று தெய்வத் தொண்டு, இன்னொன்று தெய்வத் தமிழ்த்தொண்டு. இரண்டையும் இரண்டு கண்களாகவே பாவித்துச் சிறந்த தொண்டு செய்து வருகிறார்.

இவ்வளவு பொறுப்புக்களிடையே, நூலகம் சென்று பல நூற்களை ஆய்வு செய்து, ஆய்வு செய்தவைகளை முறையாகத் தொகுத்து நூல்களாக அதிலும் ஐம்பது நூல்களை வெளியிட்டுள்ளார் என்றால் அது சாதாரண சாதனை அல்ல; பெரிய இமாலய சாதனை ஆகும்.

இது சாதாரண சாதனை அல்ல, மகத்தானது; செயற்கரிய சாதனை ஆகும். வள்ளுவர் சொல்கிறார்,

செயற்கரிய செய்வார் பெரியர் சிறியர்
செயற்கரிய செய்க லாதார் – என்று.

இத்தனைக்கும் ஒரு படாடோபம் இல்லை; செருக்கில்லை; பெருமையடிப்பதில்லை. ஏன் அதிகமாகப் பேசமாட்டார். நாம் பேசினால் பதிலுக்கு அளவாகப் பேசுவார்; அவ்வளவுதான்.

நமது அருட்கவி. ஏராளமானவர்களுக்குத் 'துண்டு', 'பொன்னாடை' போற்றியுள்ளார். ஆனால் அவர் 'துண்டு' அணிந்துகொள்வதில்லை. அவ்வளவு எளிமை, அவ்வளவு அடக்கம்.

சொற்பொழிவாற்ற வருபவர்களை வரவேற்று உபசரிப்பதில் நமது அருட்கவியைப் போல் நான் எங்கும் கண்டதில்லை. வரவேற்று உபசரிப்பதோடு நின்றுவிட மாட்டார். கடைசிவரை உடன் இருந்து பேருந்தில் தானே நேரில் வந்து வழியனுப்பி வைப்பார். இது தமிழகத்தில் வேறு எங்கும் காணாத காட்சி.

நாம் பேசத் தொடங்குவோம். அருட்கவி எதிரில் அமர்ந்திருப்பார். கொஞ்ச நேரத்தில் வேறு எங்கோ பார்ப்பார்; சில சமயங்களில் எழுந்து அங்குமிங்கும் போய் வருவார். 'அடடா இவ்வளவு சிரமப்பட்டுப் பேசுகிறோம். அருட்கவி அதைச் சரிவரக் கேட்காது அலட்சியம் செய்கிறாரே' என்று நமக்கு எண்ணத் தோன்றும். ஆனால் நமது பேச்சு முடிந்து நன்றியுரை சொல்லும்போது, நாம் பேசிய கருத்துக்களை ஒன்று விடாமல் தொகுத்து மிக அற்புதமாகச் சொல்வார். அப்பொழுதுதான் தெரியும் இவர் வெறும் அருட்கவி மட்டுமல்லர்; சிறந்த அவதானியும்கூட என்று.

'கம்பரின் கைவண்ணமும் சடகோபர் அந்தாதியும்' என்னும் இந்தநூலை, ஏழு தலைப்புக்களில் மிக அற்புதமாகப் படைத்துள்ளார். கம்ப இரரமாயணத்தை நான் வெகுகாலமாய் படித்தும் மேடைகளில் பேசியும் வருகிறேன். ஆனால் 'சடகோபர் அந்தாதி' பற்றி எனக்கு அதிகம் தெரியாது. அருட்கவி, கம்பர் ஏன் அதனைப் பாடினார்? அவர் பாடிய பிறகு சடகோபருக்கு மேலும் மதிப்பு உண்டாகிய விவரங்களையெல்லாம் மிகத் தெளிவாக விளக்கியுள்ளார். மேலும் கருடபகவான் தொண்டு பற்றியும் கம்பரின் திருமணக் காட்சியை நேரில் பார்ப்பது போல் திருமணச் செய்தியைக் காண வைத்துள்ளார்.

நமது காசி அவர்களின் நடை மிகச்சிறந்த நடை. சொல்லவேண்டிய எல்லாக் கருத்துகளையும் சொல்லி விடுவார். அப்படிச் சொல்லும்போது தேவையில்லாமல் ஒரு வார்த்தை கூட இருக்காது; இப்படி எழுதும் திறமை எல்லோருக்கும் அமையாது. பெரும்பாலும் கதை பண்ணியே பக்கத்தை நிரப்புவார்கள். ஆனால் நமது அருட்கவி.அ. காசி அவர்கள் அந்தக் கூட்டத்தைச் சேர்ந்தவரல்லர்.

'இந்தக் கம்பரின் கைவண்ணமும் சடகோபர் அந் தாதியும்' என்னும் நூல் தமிழ் மக்களால் சிறப்பாக வரவேற்கப்படும் என்பதில் சிறிதும் ஐயமில்லை. பல இலக்கியங்களில் தோன்றும் அகத்தியரை ஒப்பீடு செய்துள்ள கவிஞரின் ஆற்றலைப் போற்றுகிறேன்.

நமது அருட்கவி மேலும் மேலும் இப்படிப்பட்ட நூற்களை எழுதித் தமிழ்த்தாய்க்கு அணிகலன்களைச் சூட்டுமாறு அன்புடன் கேட்டுக் கொள்கிறேன். நமது அருட்கவி.அ.காசி அவர்களின் தமிழ்த்தொண்டு மேலும் மேலும் வளர வாழ்த்துகிறேன்.

அன்புள்ள,

இரா. செல்வா

**தா.கு. சுப்பிரமணியன்,**
தமிழ்த்துறைத் தலைவர் (ஓய்வு),
மதுரைக் கல்லூரி,
மதுரை – 11.

# மதிப்புரை

''கம்பன் தன் கதையைக் காவியமாகவே கருதி சம்ஹிதைக்காரர்கள் சொல்வது போலச் சொல்லாமல், சுவைபட வகுத்தலையே தன் தர்மமாகக் கொண்டு, தன் காவிய மாளிகையைக் கட்டியுள்ளான்'' என்று கம்பனின் கவித் திறமையைப் பற்றி மகரிஷி வ.வே.சு.ஐயர் குறிப்பிடுகிறார். படிகொண்ட கீர்த்தி இராமாயணம் என்னும் பக்தி வெள்ளத்திலே மூழ்கித் திளைத்தவன் கம்பன். காலமும் கணக்கும் நீத்த காரணனாக விளங்கும் காகுத்தனைப் பாடிப்பாடி மகிழ்ந்தவன் கம்பன். இவ்வாறெல்லாம் அனுபவித்து உருகி உருகி அன்பெனும் ஆறு கரையது புரள நன்புலனொன்றி நாதவென்று அரற்றி எழுதிய பனுவலைத் திருவரங்கத்தில் உடனடியாக அரங்கேற்ற முடியவில்லை.

''இறைவனைப் பற்ற வேண்டுமானால் ஆசார்யனைப் பற்ற வேண்டும். ஆசார்யன் அருளில்லாமல் எதையும் சாதிக்க இயலாது. ஆசார்ய அபிமானமே உத்தேஸ்யம்'' என்று ஸ்ரீவசனபூஷணம் பகரும். எனவே கவிச்சக்ரவர்த்தி கம்பர், சுவாமி நம்மாழ்வாரைப் போற்றிச் சடகோபர் அந்தாதி பாடினார். பின்னர் பாடப் பெற்ற சடகோபர் அந்தாதி முன்னர் பாடப்பெற்ற இராமாயணத்தை விட முன்னர் அரங்கேறியது. எனவே சடகோபர் அந்தாதி பற்றிய ஒரு சிறு தொகுப்பு நூலை வெளி

யிட்டு மகிழ்கிறார், அருள்நெறிக் கவிஞர் திரு.அ. காசி அவர்கள்.

திரு.அ. காசி அவர்கள் நுண்மான் நுழைபுலம் மிக்கவர். கவிதை ஆற்றலும் கட்டுரை வன்மையும் மிக்கவர். இந்நூல் ஏழு கட்டுரைகள் அடங்கிய தொகுப்பாக உள்ளது. முதலில் சடகோபராகிய நம்மாழ்வார் பற்றிய வரலாற்றுக் குறிப்பைத் தந்தருள்கிறார். நம்மாழ்வாராகிய சடகோபன், மாறன், வகுளாபரண பாஸ்கரன் முதலான திருப்பெயர்களுக்கு உண்டான காரணங்களை விளக்குகிறார். மேலும் அவரால் அருளிச் செய்யப் பட்ட நான்கு வேதங்களின் சாரமான திருவிருத்தம், திருவாசிரியம், பெரிய திருவந்தாதி, திருவாய்மொழி ஆகியவற்றின் சீர்மைகளை விளக்குகிறார். மதுரகவி ஆழ்வாருக்கும் நம்மாழ்வாருக்கும் ஏற்பட்ட ஒழிக்க ஒழியாத உறவை விளக்கியுள்ளார்.

''கம்பர் சடகோபர் அந்தாதி பாடக் காரணம்'' என்னும் அடுத்த இயலில் சடகோபர் அந்தாதி பாடக் காரணம், அந்தாதிக்குரிய இலக்கணம் தொல்காப்பியத்தில் எங்ஙனம் விளக்கப்பட்டிருக்கிறது என்றும் ஆசிரியர் விளக்கிச் செல்கிறார்.

''விருந்தே தானும் புதுவது கிளந்த யாப்பின் மேற்றே'' என்ற தொல்காப்பிய நூற்பா இவ்வாறான இலக்கியம் தோன்ற வழி வகுத்துள்ளது என்று கூறுவது ஆசிரியரின் இலக்கணப் புலமைக்குச் சான்றாக இருக் கிறது.

சடகோபர் அந்தாதித் தனித்திறன் என்னும் பகுதியில் திருவாய்மொழியின் மேலான தன்மையைப் பரக்கப் பேசியுள்ளார். வேதத்தையும் விஞ்சியது திருவாய்மொழி. வேதம் முழுவதையும் கடந்தவர்கள் திருவாய்மொழியின்

ஓரடியைக் கடப்பது என்பது இயலாத செயல், என்று தமிழ் வேதமான திருவாய்மொழியின் பெருமையைச் சட கோபர் அந்தாதி கூறுகின்றது. பிறவியறுப்பது திருவாய் மொழி. நுட்பமான தமிழிசை நூல் திருவாய்மொழி, தானம், தவம் ஆகியவற்றைத் தருவது திருவாய் மொழி. வேதசாரம் திருவாய்மொழி என்றெல்லாம் கூறும் ஆசிரியரின் அறிவு போற்றி வணங்குவதற்கு உரியது.

நம்மாழ்வார் பராங்குசநாயகியாகி நம்பெருமாளை அனுபவிக்கிறார். கம்பர் நாயகி பாவத்தை ஏற்றுக் கொண்டு சுவாமி நம்மாழ்வாரைத் தலைவராக்கி அனுப விக்கிறார். ஞானத்தில் தன் பேச்சும், பிரேமத்தில் பெண் பேச்சும், பேசும் கம்பரின் அகத்திணை மரபுகளைச் சட கோபரந்தாதியிலிருந்து வெளிக்கொணர்கிறார் ஆசிரியர் அ. காசி அவர்கள்.

அடுத்த இயல் ''கருட பகவான் துதியும் பயன் கருதாத் தொண்டும்'' என்பதாகும். இக்கட்டுரை இடைப் பிறவரல் போலத் தோன்றும். ஆனால் இதை அவ்வாறு கூற இயலாது. சடகோபர் அந்தாதி அரங்கேறிய பிறகு, இராமாயணத்தில் இடம் பெற்றுள்ள நாகபாசப் பாடலைப் பாடிப் பாம்பு தீண்டி இறந்த ஓர் அந்தணனின் குழந்தையை உயிர்ப்பித்தார் கம்பர் என்பர். எனவே இராமாயண அரங்கேற்றத்திற்கு இப்படலம் மூல காரண மாகிறது. எனவே இக்கட்டுரை இயைபுடையதாகவே இருக்கிறது.

ஏழு கட்டுரைகள் அடங்கிய இத்தொகுப்பு நூல் பகவத் பாகவத சிறப்புக்களை உள்ளடக்கியதால் வைணவ சம்பிரதாயங்களைப் பறைசாற்றுவதாய் அமைந்துள்ளது. நமக்கும் இறைவனுக்கும் உள்ள சம் பந்தம் என்ன என்பதைச் சடகோபர் அந்தாதி விளக்குகிறது. பலகோணங்களில் அகத்தியருடைய

திருவிளையாடல்களை கம்பரின் காவியத்தோடு ஒப்பிடு செய்துள்ளார் அருள்நெறிக் கவிஞர் காசி அவர்கள்.

''சிறந்த சீரிய அரிய பெரிய கருத்துக்களைத் தன்னகத்தே கொண்டிலங்கும் இந்நூல்,. ஓங்கி உலகளந்த உத்தமனைப் போல் உயர்ந்து விளங்க சடகோபர் திருவடிகளை இறைஞ்சுகிறேன். நற்றமிழ்ப் புலமைமிக்க அருள்நெறிக் கவிஞர் அ. காசி அவர்களின் இச்சீரிய முயற்சிக்குத் தமிழ் உலகம் மிகவும் நன்றிக் கடப்பாடுடையது.

வாழ்க! வளர்க அவர்தம் தமிழ்ப்பணி.

அன்புடன்
தா.கு. சுப்பிரமணியன்.





**டி.ஆர். தினகரன், பி.இ.,**
212, இராமசாமி நகர்,
தபால் பெட்டி எண். 18,
அருப்புக்கோட்டை – 626 101.

# வாழ்த்துரை

அருட்கவிஞர் திரு.அ. காசி அருப்புக்கோட்டையின் ஆன்மீக, இலக்கிய சொத்து என்று கூறலாம். அவர் இயற்றிய நூல்கள் ஏராளம். அனைத்தும் ஆன்மீகம் அல்லது தேசியம் பற்றியே இருக்கும்.

தற்போது கம்பரின் கைவண்ணமும் சடகோபர் அந்தாதியும் என்னும் இந்நூல் வெளிவருகிறது. சிறந்த நூல்.

அவருடைய இலக்கியப் பணிகளுக்குத் துணை நின்று உதவிட குருவருள் வேண்டிப் பிரார்த்திக்கிறேன். வாழ்த்துகிறேன்.

அன்புடன்

டி.ஆர். தினகரன்

## பொருளடக்கம்

# 1. கம்பரின் திருமணக் காட்சி

கம்பரால் போற்றப்பட்ட புலவர்களில் திருவாலி அமுதனார் என்பவரும் ஒருவர். அவர் சோழநாட்டுத் திருவாலி மலையில் வாழ்ந்தவர். கம்பரின் திருமணக் காட்சிப் பாடல்களைத் தமிழ் இலக்கிய வரலாற்றில் தந்து சிறப்புப் பெற்றுள்ளார். அப்பாடல்கள் மூலம் கம்பரின் மணவினைக் காட்சியை நாம் அறிகிறோம்.

சிறு வயதில் தந்தையை இழந்த கம்பன் ஓர் கணக்காயரிடம் திருவெண்ணெய் நல்லூரில் சடையப்ப வள்ளலின் ஆதரவில் கல்வி கற்று வந்தான்.

பின் வாலிப வயதில் நீண்ட அருட்கரம் கொண்ட சதுரானனப் பண்டிதரிடம் கல்வியைத் தொடர்ந்தான். சதுரானனப் பண்டிதரிடம் வால்மீகி இராமாயணத்தைக் கற்றுத் தேர்ந்தான். தமிழ்ப்புலமையுடன் வடமொழிப் புலமையிலும் வல்லவரானான்.

திருமயான மடத்தில் பண்டிதரிடம் கம்பன் கல்வி கற்றான். சதுரானனப் பண்டிதரின் மகள் நிகர்த்த வல்லியாவாள். அவளுடைய அழகில் ஈடுபட்டான் கம்பன்.

*''நடக்கில் அன்னமாம், நிற்கில் வஞ்சியாம்*
*கிடக்கில் ஓவியப் பாவை – கிடந்ததாம்*
*தடக்கையான் சதுரானன பண்டித*
*மடத்துளாள் என் மனதுறை வல்லியே!''*

கம்பனின் மனதைக் கவர்ந்த நிகர்த்த வல்லி, அன்ன நடையாள், வஞ்சிக்கொடி போல் நிற்பாள். ஓவியப் பாவை போல் படுத்திருப்பாள்.

கம்பன் தான் கண்ட வல்லியைத் திருமணம் புரிய எண்ணிப் பண்டிதரிடம் கேட்டான். சதுரானனப் பண்டிதரும் மகிழ்ந்து சம்மதித்தார். பெண் பார்க்கும் படலம் நடைபெற்றது.

"திருவொற்றியூர்க் கோபுரத்தின் கீழ் நில்" என்று கம்பனுக்குக் கட்டளையிடப்பட்டது. அப்படியே கம்பன் நின்றான். அப்போது பெண்களுடன் வந்தாள் நிகர்த்தவல்லி. முல்லை மலர்களைத் தொடுத்தாற் போன்ற பல்வரிசை – மதிமுகத்தாள் – அவளுடைய விழிப்பார்வை அம்பெனக் கம்பனின் மனத்தில் பாய்ந்தது. பெண் பார்க்கும் படலம் சிறிது நேரமே. எனினும் கம்பனின் இதய கமலத்தில் பதிந்துவிட்டாள் வல்லி.

கம்பன் சடையப்ப வள்ளலை அணுகினான். தன் எண்ணத்தைத் தெரிவித்தான்.

செல்வந்தர் சடையப்ப வள்ளலின் பேருதவியால் தனக்கு இல்லற நல்வாழ்வு கிடைத்தது என்பதைக் கம்பன் ஒரு பாடலில் எடுத்தியம்புகிறான். இதோ அப்பாடல்,

*"புக்கு விடைத்தழுவி கோடுஉழுத புண்ணெல்லாம்*
*திக்கில்உயர் காளி யம்பன் தென்புலன்மான் –அக்கணமே*
*தோள் வேது கண்டிலனேல் சுந்தரப்பொன் றேன்றலுக்கு*
*வாழ்வேதும் கண்டிலமே மற்று"*

**அருஞ்சொற்பொருள்**

| | |
|---|---|
| காளியம்பன் | – செல்வந்தர் |
| தென்புலன்மான் | – சடையப்ப வள்ளல் |
| விடைத்தழுவி கோடு உழுத | – காளையை அடக்கிய தனால் கொம்பால் ஏற்பட்ட தழும்பு |

**பாடல் கருத்து**

வலிமை மிக்க ஒரு காளையை அடக்கிப் புண் பட்ட ஆடவன், தான் விரும்பிய அழகிய கன்னியை அக்காலத்தில் பெற்றது போல், செல்வந்தர் சடையப்ப வள்ளலின் ஆதரவைப் பெற்றதால், சுந்தர அழகியாகிய நிகர்த்த வல்லியைத் தான் திருமணம் செய்து புது வாழ்வு பெற்றேன் எனக் கம்பர் கூறுகிறார்.

கம்பனுக்கும், நிகர்த்த வல்லிக்கும் திருமணம் மயிலையில் சிறப்பாக நடைபெற்றது. தாரை வார்த்தல், மாலை மாற்றுதல், தாலிபாக்கியம் பெறும் மணவிழா ஆன்றோர் வாழ்த்துரைகளுடன் மணவினை நடை பெற்றது. பின் மணமக்கள் இசையொலிக்க, ஊர்வலம் மயில்லயில் நடைபெற்றது. மதிமுகத்தாள் நிகர்த்த வல்லி கணவனுடன் உரையாடி களிப்படைந்தாள்.

தமிழ்த் திருநாட்களில் தைப்பொங்கல் திருவிழா முடிந்ததும், மாமனார் சதுரானனப் பண்டிதர் தன் மகள் வல்லியையும் மருமகனையும் சீர்வரிசைச் சிறப் புடன் திருவொற்றியூரிலிருந்து, திருவெண்ணெய் நல்லூருக்கு அனுப்பி வைத்தார்.

திருவெண்ணெய் நல்லூரில் மணமக்களை வரவேற்க சடையப்ப வள்ளல் பிரமாதமாக ஏற்பாடு

செய்தார். திருவெண்ணெய் நல்லூரின் தெருக்களின் இருபுறமும் வாழை, கரும்பு, தோரண ஏற்பாடுகளைச் செய்தார். தன் வீட்டு அருகில் பெரிய பந்தலிட்டு விழா நடைபெற ஏற்பாடு செய்திருந்தார்.

யானை அலங்காரம், சிவிகையில் மணமக்கள் ஊர்வலம், வாத்திய மேளஇசையுடன் வரச் செய்தார். கற்றோர், பாவலர்கள் புடை சூழ வருகை தர, இள வரசர் விஜயாலயன் தரிசனத்துடன் விழா நடை பெற்றது. அனைத்தும் சடையப்ப வள்ளலே முன்னின்று ஏற்பாடு செய்தார்.

நெற்கதிரால் கூரை வேய்ந்த குடில் ஒன்றை அமைத்து அக்குடிலில் மணமக்கள் தங்கி வாழ ஏற்பாடு செய்தார் சடையப்பர்.

சடையப்பர் செய்த பேருதவியைப் பாராட்டிக் கம்பர்,

> ''புதுமாதர் வீட்டைப் புகழ்பெறவே செந்நெற்
> கதிரானே வேய்ந்தருளுங் கைநேர் – பதிசீர்குண
> வருவெண்ணெய் நாடன் வரும் நாவலர்க்கு
> தருவான வன்சடையன் தான்''

என்று பாடியுள்ளார்.

இவ்வாறு திருவொற்றியூரில் பெண் பார்க்கும் படலம், மயிலையில் திருமணவிழா, திருவெண்ணெய் நல்லூரில் இல்லறம் நடத்துதல், எனக் கம்பரும் நிகர்த்த வல்லியும் இனிது வாழ்ந்தனர் என்பதை அறிகிறோம்.

கம்பருக்கும் நிகர்த்த வல்லிக்கும் பிறந்தவன்தான் அம்பிகாபதி என்பதை அறிகிறோம்.

# 2. சடகோபரின் வரலாறு

## நம்மாழ்வார் அவதாரம்

மண்ணுலகில் தோன்றிய உயிரினங்களுள் மேலானது பகுத்தறிவு வாய்ந்த மானிடப் பிறவியாகும். உய்யும் வகையறியாது அல்லற்படும் மாந்தரைக் காத்தருளத் திருவுளங் கொண்ட திருமால், வைகுந்தத்தில் கருடாழ்வாரையும், அனந்தாழ்வாரையும், நோக்கி, "நீங்கள் இருவரும் முன்னதாக பூமியில் திருக்கோளூரில் மதுர கவியாகவும், திருக்குருகூரில் திருப்புளி மரமாகவும் தோன்றுங்கள். என்னுடைய கௌஸ்துப மதாணி அம்சமாகவும், சேனைத் தலைவர் விஷ்வக் சேனர் அம்சமாகவும், திருக்குருகூரில் சடகோபரை அவதரிக்கச் செய்கின்றேன். உரிய நேரத்தில் யாமே வந்து சடகோபருக்கு அருள்புரிவோம்" என்றார்.

ஸ்ரீமந் நாராயணனின் திருவுள்ளப்படியே பாண்டிய நாட்டில் திருக்குருகூர் நகரை ஆட்சிபுரியும் காரியார்க்கும், பாகவதத் தொண்டில் மிக்க ஈடுபாடு கொண்ட அவருடைய மனைவி உடைய நங்கைக்கும் வைகாசி விசாக நாளில் குழந்தையாக அவதரித்தார், சடகோபர். குழந்தை பிறந்தபின் உலகக் குழந்தைகளின் வளர்ச்சி நிலைப்படி இல்லாமல் கண்களைத் திறக்காமல் அழுதல், பாலுண்ணல் ஆகியவை இல்லாதபடி குழந்தை வளர்ந்த காரணத்தினால் (உலக இயல்புக்கு மாறுபட்டமையால்) மாறன் என்ற பெயரை

பெற்றோர் இட்டனர். குழந்தையின் வியத்தகு நிலையைக் கண்டு பெற்றோர்கள் ஆச்சரியப்பட்டனர்.

குழந்தை தான் பிறந்த உடனே அஞ்ஞானத்தை உண்டாக்கும் சடமென்னும் வாயுவைத் தன் உடலைத் தொடாதபடி தடுத்துக் கோபித்து விரட்டிய காரணத்தினால் சடகோபர் என்னும் திருநாமத்தைப் பெற்றது.

குழந்தை பிறந்த பன்னிரண்டாம் நாளில் அதனை ஒரு தொட்டிலில் வைத்துத் திருக்குருகூரில் உள்ள ஆதிநாதர் திருக்கோவிலுக்குக் கொண்டு சென்று, ஆதிப்பிரானைத் தொழுது போற்றிப் பெற்றோர்கள் வணங்கினார்கள்.

அப்பொழுது தொட்டிலில் செயலற்று இருந்த குழந்தை, துடிப்புடன் கால்களையும், கைகளையும் கொண்டு மெதுவாகத் தவழ்ந்தபடியே வடபுறத்திலிருந்த திருப்புளிய மரத்தின் கீழ் தவ நிலையில் உட்கார்ந்தது. இதைக் கண்ட பெற்றோரும் மற்றோரும் வியப்படைந்து, "இது ஒரு தெய்வீகக் குழந்தை!" என்று எண்ணி அருகில் வந்து துதித்தனர். யோக நிலையில் 16 வருடங்கள் அன்ன ஆகாரமின்றிப் பேச்சின்றி அக்குழந்தை இருந்தது.

மதுரகவியாழ்வார் அவதாரம்

ஸ்ரீமந் நாராயணன் ஆணைப்படி கருடாழ்வார் திருநெல்வேலி மாவட்டத்தில் திருக்கோளூரில் ஓர் வைணவ பிராமணருக்கு மகனாகப் பிறந்து கவி பாடுவதில் வல்லவனாகி, மதுரகவி எனப் பட்டம் பெற்று, முப்புரிநூலும், கல்விப்பயிற்சியும் பெற்றுப் பல கலைகளையும் கற்றுணர்ந்தார். பின் தேச யாத்திரைப் புறப்

பட்டு வடபுலத்தில் அயோத்தி அடைந்தார். அயோத்தியில் இராமபிரானைத் தரிசித்துத் தென் திசையை நோக்கிப் பார்த்தார். என்னே வியப்பு! என்றும் காணாத புதியதொரு வெளிச்சம் தென்புலத்தில் தோன்றுவதைக் கண்டார்.

வியப்புற்ற மதுரகவி அந்த வெளிச்சத்தை நோக்கி யாத்திரை சென்றார். திருவேங்கடம், திருவரங்கம், திருமாலிருஞ்சோலை, திருவில்லிபுத்தூர் முதலிய தலங்கள் வழியாகத் திருக்குருகூர் அடைந்த போது அந்த வெளிச்சம் ஆதிபிரான் ஆலயத்திற்குள் சென்று, வடபுறத்திலுள்ள திருப்புளியமரத்தில் காட்சி தந்து மறைந்ததைக் கண்டார்.

அங்குச் சென்ற மதுரகவியார் திருப்புளியமரத்தின் அடியில் ஒருவர் கண்களை மூடித் தியானம் செய்வதையும், அவரருகில் பெருங்கூட்டம் வணங்குவதையும் கண்டார். பலரும் அவரை வலம் வந்து கைகூப்பி வணங்கி நின்றனர். பல ஆண்டுகளாக யோக நிலையில் இருப்பதை மக்கள் கூற மதுரகவியார் திருமாலை எண்ணி அவர் விழிப்பாரோ, விழிக்கமாட்டாரோ! என்று ஐயத்துடன் ஒரு கல்லை எடுத்து யோக நிலையில் இருக்கும் சடகோபர் முன்னால் போட்டார். கல் கீழே விழுந்த சப்தத்தைக் கேட்டுச் சடகோபர் கண்களைத் திறந்தார். அதைக் கண்ட மதுரகவியார் மிக்க மகிழ்ச்சியடைந்து, அவரைப் பேசவைக்க வேண்டுமென்று கருதி, அவர் பக்கத்தில் சென்று,

"துறவியே! செத்தத்தின் வயிற்றில் சிறியது பிறந்தால், எத்தைத் தின்று எங்கே கிடக்கும்?" என்று வினவினார். மதுரகவியார் கேட்ட அந்த வினாவிற்கு

"அசித்தான உடலிலே அணு அளவான ஆத்மா தொடர்புற்றுத் தங்குவதால் அது எதனை அனுபவித்து எப்படி நிற்கும்?" என்பதாகும்.

மதுரகவியார் இவ்வாறு வினா எழுப்பிய பொழுது, உடனே அந்தத் துறவி வாயைத் திறந்து, "அது அத்தைத் தின்று அங்கே கிடக்கும்! என்று பதில் கூறினார். அதாவது "அந்த ஆத்மா தான் தங்கி இருக்கும் உடம்பின் சுக துக்கங்களைச் சார்ந்தே இருக்கும்" என்பது அத்துறவி கூறிய சொற்களின் பொருளாகும்.

துறவி கூறியதைக் கேட்ட மதுரகவியார் மகிழ்ச்சி யுற்று ஐயம் நீங்கி, சடகோபராகிய துறவியின் திருவடி களில் வீழ்ந்து வணங்கி, அவரே தனது குருநாதர் எனத் தெளிந்தார்.

தனக்கு உபதேசம் அளிக்க வேண்டுமென்ற நிலையில், "வாடி நிற்கும் செந்நெற் பயிர்கள், மழை முகில் கண்டது போல், மதுரகவியார் அத்துறவியை நோக்கி நின்றார்.

### நம்மாழ்வார் பாடியவை

அப்போது கருட வாகனத்தில் ஸ்ரீமந் நாராயணன் காட்சி தந்தார். துறவியாகிய சடகோபரை நோக்கி, மெய்யறிவுச் செல்வத்தை உலகிற்கு இனிய தமிழில், அருளுமாறு ஆணையிட்டார்.

காணுவதற்கரிய திருமாலின் திருமேனிக் காட்சி யைக் கண்ட சடகோபர் அப்படியே பெருமாளின் திருவடியில் வீழ்ந்து வணங்கினார்.

''மெய்யறிவுச் செல்வத்தைத் தருக!'' என்று திருமால் ஆணையிட்ட காரணத்தால் கைகுவித்து வாய் திறந்து, பாய்ந்தோடும் வெள்ளத்தைப் போல ஆதி மூலக் கடவுளின் எல்லையற்ற நற்குணங்களைத் ''திருவிருத்தம்'', ''திருவாசிரியம்'', ''பெரிய திருவந்தாதி'', ''திருவாய்மொழி'' ஆகிய நான்கு திவ்விய பிரபந்தங்களை **1102** பாடல்களாகத் திருவாய் மலர்ந்தருளினார்.

அதேசமயம், நம்மாழ்வாராகிய சடகோபர் பாடிய நான்கு பிரபந்தங்களையும் மதுரகவியார் ஏடு கொண்டு எழுதி உலகமக்கள் அறியுமாறு தொண்டு செய்தார். நம்மாழ்வார் பாடிய நான்கு பிரபந்தங்களும், நான்கு வேதங்களுக்கு ஒப்பானவையாகும்.

**சடகோபரே நம்மாழ்வார்**

மற்றெல்லா ஆழ்வார்களிலும் சடகோபரைச் சிறப்பாகத் திருமால் கருதிய காரணத்தால் நம்மாழ்வார் என்று அழைக்கப்படுகிறார். பிறக்கும் போதே சடம் என்னும் வாயுவைக் கோபித்துத் தடுத்த காரணத்தால் சடகோபர் என்று அழைக்கப்படுகிறார். பிறந்ததிலிருந்து பல ஆண்டுகள் உண்ணுவது, உறங்குவது, அழுவது இல்லாமல் வளர்ந்த தன்மை உலக இயல்புக்கு மாறுபட்டிருப்பதால் மாறன் என்று அழைக்கப்படுகிறார். திருமால் காட்சியளித்து மகிழும் பூவாகிய வகுள மாலையை வாங்கி சூடிக் கொண்டதால் வகுளாபரணர் என்ற சிறப்புப் பெயரையும் பெற்றார். எம்பெருமான் நம்மாழ்வாருக்குத் ''திருவடி தொட்டு வணங்கும் அருளைக் கொடுத்ததால், எம்பெருமான்

பாது கைகளுக்கும் ஸ்ரீ சடகோபன் என்றே பெயர் வழங்கப்படுகிறது.

நம்மாழ்வார் தம் அருமைத் தொண்டன் மதுரகவியுடன் திருப்புளிய மரத்தின் அடியில் திருமாலின் திரவடித் தாமரையில் 32 ஆண்டுகள் வாழ்ந்தும் தம் கடமைகளை ஆற்றினார். அப்போது திருமால் காட்சி தந்து, "ஆழ்வார்களுக்குத் தலைவனே! இனி நீர் எண்ணியபடியே விண்ணுலகடைந்து எம்முடன் தொண்டு செய்வீராக" என்று கூற நம்மாழ்வார் விண்ணுலகடைந்தார்.

மதுரகவியார்க்குத் திருமால் காட்சி தந்து "பெருந்தகையே, நீவிர் கலங்க வேண்டாம், இன்னும் சிறிது காலம் எம்மனோர்க்கு திருவிழாக்கள் நடத்தியும், பிரபந்தங்களையும் இயற்ற தொண்டு புரிவீராக" என்று அருளி மறைந்தார்.

நம்மாழ்வார் பரமபதம் அடைந்த பிறகு மதுரகவி ஆழ்வார் நம்மாழ்வாரின் திருஉருவத்தை விக்கிரக வடிவில் ஆழ்வார்திருநகரியில் ஏறி அருளுச் செய்து, நித்தியனநமித்திக உற்சவங்களை நடத்தி வந்தார்.

பின் திவ்விய பிரபந்தங்களைப் பாடி பாருல கெங்கும் பரவச் செய்து பலகாலம் தொண்டாற்றி வீடு பேறு பெற்றார்.

நம்மாழ்வாருக்குக் கம்பன் கடன்பட்டுள்ள உயர்ந்த நிலையை "கம்பன் கண்ட திருநெறி" என்ற நூலிலே டாக்டர் எஸ். ஜெகத்ரட்சகன் சுவைத்து நல்கக் காணுகின்றோம்.

# 3. கம்பர், சடகோபர் அந்தாதி பாடக் காரணம்

கம்பர் தாம் இயற்றிய இராமாயணத்தைச் சோழச் சபையில் அரங்கேற்றவில்லை. மக்கள் சபையாகிய திரு வரங்கத் திருத்தலத்தில் அரங்கேற்ற எண்ணி அங்கு வருகை தந்தார். ஸ்ரீரங்கத்திற்குச் சென்ற கம்பர் அங்குள்ள ஸ்ரீ வைணவர்களுக்கு இராமாயணம் அரங் கேற்றம் செய்வது குறித்துச் செய்திகளைச் சொன்னார். அப்போது அவர்கள் பல விதிகளை விதித்தனர். தில்லை வாழ் அந்தணர்களிடம் ஒப்புதல் கையெழுத்து வாங்கி வரச் சொன்னார்கள். அதேபோல், கற்று வல்ல பலரிடம் கையெழுத்து வாங்கி வரச் சொன்னார்கள். அனைத்தையும் கம்பர் தளராது செய்து முடித்தார். அரங்கேற்ற கம்ப மண்டபமும் திருக்கோவிலில் கட்டப் பட்டது. ஸ்ரீரங்கத்தில் ஆளவந்தார்க்கு உபதேசம் அருளியவரும், பராங்குசர் சொற்பிரபந்தம் பரிந்து கற்ற வரும், அங்குப் பணிபுரிந்தவரும் ஆகிய ஸ்ரீமந் நாத முனிகள் முன்னிலையில் இராம காதையை அரங் கேற்றத் தொடங்கினார், கம்பர்.

அப்போது அரங்கநாதரை வழிபாடு செய்பவரும், அங்கு அர்ச்சகராகப் பணிபுரியும் ஒருவரின் உடலில் ஸ்ரீரங்கநாதர் புகுந்து ஆர்ப்பரிக்க, அப்போது அந்த அர்ச்சகர் ஆவேசங் கொண்டு, ‘‘கம்பனே! நீ நம் ஆழ்வார் சடகோபனைப் புகழ்ந்து பாடினையோ?

பாடினால்தான் உனது இராம காதை காப்பியத்தை ஏற்றுக் கொள்வோம். அல்லாவிடில் அங்கீகாரமாகாது பிள்ளாய்! என்று கூறினார்.

ஸ்ரீரங்கநாதர் வாக்காய் அர்ச்சகர் கூறக்கேட்ட கம்பர், இதற்குமுன் திருவிருத்தம், திருவாசிரியம், பெரிய திருவந்தாதி, திருவாய்மொழி ஆகிய நான்கு திவ்வியப் பிரபந்தங்களை உலகிற்குத் தந்த நம்மாழ்வா ராகிய சடகோபரைப் போற்றி நூல் இயற்ற அரிய வாய்ப்பு கிடைத்தது பற்றி மகிழ்ச்சியடைந்தார்.

கம்பர் தன் இராமாயணத்தை அரங்கேற்றுவதற்கு முன் பாடப்பட்ட நூலே சடகோபர் அந்தாதியாகும். நூறு கட்டளைக் கலித்துறையில் சடகோபர் அந்தா தியைக் கம்பர் பாடினார். கதையாக இல்லாமல், சடகோபர் மீதும் அவரின் 1102 பாடல்களின் அருமை பெருமை போற்றியும் இயற்றப்பட்ட சொற்றொடர் தொடர்நிலை அந்தாதியாகும். சடகோபர் அந்தாதி யைச் சடுதியில் கம்பர் பாடி முடித்தபின் இராம காதையை ஸ்ரீரங்கத்தில் சிறப்பாக அரங்கேற்றினார்.

தொல்காப்பியச் செய்யுளில் கூறப்பட்ட அம்மை, அழகு, தொன்மை, தோல், விருந்து, இயைபு, புலன், இழைபு என்ற எண்வகை வகுப்பினுள்,

''விருந்தே தானும் புதுவது சிறந்த
யாப்பின் மேற்றே.''

என்ற புத்திலக்கியத் தொடர்ச்சியின் வழி வந்ததே அந்தாதியாகும்.

தொல்காப்பிய நூற்பா உரையில் ''விருந்து''க்கு எடுத்துக்காட்டாகப் பொய்கையாரின் திருவந்தாதியைச் சுட்டிக்காட்டினார் நச்சினார்க்கினியார். தொடக்க காலத்தில் எழுந்த அந்தாதி வெண்பாவில் வெளியிடப் பட்டன. மொழி வளர்ச்சியும் சொற்பெருக்கமும் புலமைத் திறமும் கூடக் கூடப் பாவினங்களாகிய விருத்தம், கட்டளைக் கலித்துறை முதலியவற்றால் அந்தாதி வளர்ச்சி பெற்றது. சடகோபர் அந்தாதி நூறு கட்டளைக் கலித்துறைப் பாடல்களால் ஆன நூற்றந் தாதி ஆகும்.

கம்பர் தாம் பாடிய சடகோபர் அந்தாதிக்குத் தந்த சிறப்புப்பாயிரம் முன் நூல் தோன்றக் காரணமாக அமைந்துள்ளது.

### சிறப்புப் பாயிரம்

*''நம் சடகோபனைப் பாடினையோ'' என்று நம்பெருமாள்*
*விஞ்சிய ஆதரத்தால் கேட்பக் கம்பன் விரைந்து உரைத்த*
*செஞ்சொல் அந்தாதி கலித்துறை நூறும் தெரியும் வண்ணம்*
*நெஞ்சு அடியேற்கு அருள் வேதம் தமிழ்செய்த நின்மலனே.''*

**இதன் கருத்து**

''நான் மறைகளைத் தமிழ் பாடல்களாக இயற்றிய சடகோபரை, நம்மாழ்வாரைப் போற்றிப் பாடி னாயோ?'' என்று நம்பெருமாளான திருவரங்கன் அன்புடன் வினவ, அதன் பொருட்டுக் கம்பர் விரைவாகப் பாடிய நூல் – செம்மையான சொற் களைக் கொண்டது சடகோபர் அந்தாதி, அந்த அந்தா தியில் உள்ள கட்டளைக் கலித்துறைப் பாடல்கள்

நூறையும் அறிந்து கொள்ள அடியவனாகிய எனக்கு அதற்கேற்ற மனப்பாங்கை அருள்க!

### தனிச்சிறப்புப் பாயிரம்

கம்பர் தன் சிறப்புப் பாயிரமாக ஒரு பாடலை முதலில் பாடியுள்ளார். அதுவும் தான் இயற்றிய சடகோபர் அந்தாதிக்கு மூலகாரணமாக அமைந் துள்ளது. அப்பாடல் பின்வருமாறு:

*''மன்றே புகழும் திருவழுந்தூர் வள்ளல் மாறனை முன்*
*சென்றே மதுர கவிப் பெருமாள் தென்தமிழ்த் தொடையில்*
*ஒன்றே பதிகம் உரைத்தவன் பொன் அடியுற்று நின்றான்*
*என்றே பதிகம் பதிகம் அதாக இசைத் தனனே.''*

கருத்து

மதுரகவியாழ்வார் நம்மாழ்வாரைப் புகலடைந்து ஆழ்வார்திருநகரிக்கு சென்று, ''கண்ணிநுண் சிறுத் தாம்பு'' என்னும் பத்துப்பாடல் கொண்ட பதிற்றந்தா தியைப் பாடி பேறு பெற்றார். அதை அறிந்தவர் கம்பர். அதனால் மதுரகவியாழ்வாரின் பதிகம் போலப் பத்து மடங்குடைய சடகோபர் அந்தாதியைத் திருவரங்கத் தில் பாடிப் பேறு பெற்றார்.

கம்பர் தான் பாடிய சடகோபர் அந்தாதியை, மதுர கவியார் பாடிய ''கண்ணிநுண்சிறுத் தாம்பினால்'' என்று தொடங்கும் 10 அந்தாதி அமைப்பில் அமைந்த கட்டளைக் கலித்துறைப் பாடல்களைப் போலப் பத்து மடங்காகப் பாடியுள்ளார். மதுரகவியார் பாடிய அந்தா தியின் முதல்பாடலை மட்டும் நாம் அறிவோம்.

''கண்ணி நுண்சிறுத் தாம்பினால் கட்டுண்ணப்
பண்ணிய பெருமா யன்என் அப்பனில்
நண்ணித் தென்குரு கூர்நம்பி என்றக்கால்
அண்ணிக்கும் அமுதுஊ றும்என் நாவுக்கே!

கருத்து

''பல முடிச்சுகளை உடைய சிறிய குறுங்கயிற்றால் தன்னைக் கட்டும்படி யசோதையிடம் செய்து கொண்ட ஆச்சரிய சக்தி உடையவனும், என் தந்தையும் ஆகிய கண்ணபிரானை விட்டுவிட்டு, தென் குருகூர்த் தலைவர் நம்மாழ்வாரை நெருங்கி, அவர் நாமம் சொன்னால் தாழ்ந்த என் நாவுக்கே மிக இனிப்பு ஏற் பட்டு அமுது ஊறும்'' என்பது அப்பாடலின் கருத்தா கும்.

மதுரகவியாழ்வார் பாடிய மேற்கண்ட ''கண்ணி நுண்சிறுத் தாம்பினால்'' என்று தொடங்கும் பதிற்றந் தாதியின் பாடல்களின் பொருளனைத்தையும் நன்கு அறிந்தவர் கம்பராவர். மதுரகவியாழ்வார் பாடிய பதிகத்தை விட பத்துமடங்கு அதிகமுடைய அந்தாதிப் பாக்களால் நான், சடகோபர் அந்தாதிப் பாடப் போகிற பேற்றினைப் பெற்றிருக்கிறேன் என்று கூறியே, கம்பர் சடகோபர் அந்தாதியைப் பாடத் தொடங்கி னார் என்று தெரிகிறது. இனிச் சடகோபர் அந்தாதிக் குள் நுழைவோம்.

# 4. சடகோபர் அந்தாதியும் கம்பரின் தனித்திறனும்

சடகோபர் அந்தாதியைப் பாடும் முன் கம்பர், பன்னிரு ஆழ்வார்கள் பாடிய நாலாயிரத் திவ்வியப் பிரபந்தத்தை மேலோட்டமாகப் படித்தும், நம்மாழ் வாரிடத்தும், அவருடைய சீடராகிய மதுரகவியாழ் வாரிடத்தும் தன்னை ஆட்படுத்திக் கொண்டு, அவர் கள் பாக்களைக் கருத்தோடு நன்கறிந்து கொண்டு, தன் னைக் கம்பனாட்டாழ்வாராகப் பாவித்து அதன்பின் நூலை இயற்ற ஆரம்பித்தார். இராமனிடம் கம்பர் காட்டும் அன்பை, நம்மாழ்வாரிடம் கண்டு, ஒன்றியே சடகோபர் அந்தாதியை இயற்றினார்.

கம்பரின் தனித்திறத்தை அந்தாதி முழுவதும் காணு கின்றோம். கடல்போல் விரிந்த கம்பரின் ஒப்பற்ற ஆற்றலை இப்பொழுது ஒரு சில பாடல்கள் கொண்டு அறிய முற்படுவோம்.

### வேதத்தைக் கடந்த திருவாய்மொழி
(முதல்பாடல்)

நம்மாழ்வார் இயற்றிய திருவாய்மொழியின் மகத்துவத்தைக் கூறவந்த கம்பர்,

''வேதத்தின் முன்செல்க மெய்யுணர்ந்தோர் விரிஞ்சன் முதலோர்
கோதற்ற ஞானக் கொழுந்தின்முன் செல்க குணம் கடந்த

*போதக் கடல் எங்கள் தென்குருகூர்ப் புனிதன் கவிஓர்*
*பாதத்தின் முன்செல்லுமே தொல்லை மூலப் பரஞ்சுடரே.''*

கருத்து

திருமால் பழமையானவர். சர்வத்திற்கும் மூல காரணமானவர். சோதி ரூபமாக விளங்குபவர். அப்படிப் பட்ட ஸ்ரீமந் நாராயணன் வேதங்களைக் கடந்து சென் றாலும் செல்லட்டும். குற்றமற்ற ஞானத்தின் முடிவைக் கடந்து சென்றாலும் செல்லட்டும். தீக்குணங்களைக் கடந்து நின்றவரும், அறிவு நிறைந்த கடலாக விளங்குப வரும், தென்பாண்டி நாட்டிலுள்ள தாமிரவருணி நதி தீரத்திலுள்ள திருக்குருகூரில் அவதரித்த தூயவரான நம் மாழ்வார் செய்தருளிய ஒரு கவியின் ஓர் அடியைக் கூட கடந்து அத்திருமால் செல்ல வல்லவனோ? செல்ல முடி யாதவனே ஆவான்.

நம்மாழ்வார் பாடிய ஒவ்வொரு பாடலிலும் உள்ள ஒவ்வோர் அடியையும் கடந்து நிற்கக் கூடிய மிக்க பெருமை உடையவர் திருமால். அவரது கீர்த்தியை அளவிட்டு யாவராலும் கூறுமுடியாது என்பர் கம்பர்.

அருஞ்சொற்பொருள்

விரிஞ்சன் – திருமால்

போதக்கடல் – அறிவுக்கடல்.

சடகோபர் பாடிய திருவாய்மொழி, திராவிட வேத மென்று கூறப்படும் பெருமை பெற்றது. அதிலுள்ள கருத்துக்களைப் படித்து அறிந்தவர் கம்பர். உலக மக்களும், ஸ்ரீரங்கத்தில் வாழும் வைணவர்களும் கம்பர் பாடிய இப்பாடலின் மகத்துவத்தை அறிந்த காரணத்தினால்,

அன்று முதல் ஸ்ரீரங்க ஆலயத்தில் நம்மாழ்வார்க்குரிய விழாக்களும், வைபவங்களும் நடத்த முற்பட்டனர். இத்தகு மகத்துவ சிறப்புடையது முதற்பாடலாகும்.

### பிறவியறுக்கும் மூன்றாம் சுடர் திருவாய்மொழி
### (இரண்டாம் பாடல்)

*''சுடர் இரண்டே பண்டு மூன்றாயின துகள் தீர்ந்துலகத்து*
*இடர் இரண்டாய் வரும் பேர்இருள சீப்பன! எம்பிறப்பை*
*அடர்இரண்டாம் மலர்த்தாள்உடையான்! குருகைக்கரசன்!*
*படர்இருங் கீர்த்திப்பிரான் திருவாய் மொழிப்பாவொடுமே!''*

கருத்து

இருளைப் போக்கும் சுடர்கள் இரண்டு. அவை சூரியனும் சந்திரனும் ஆகும். அவை இரண்டும் உலகத்திற்கு வெளிச்சம் தருவதோடு அறியாமை, மாயை என்னும் இருவகைத் துன்பங்களை நீக்குகின்றன. இப்பொழுது திருக்குருகூரின் அரசரும், பரவிய பெரும் புகழைப் பெற்ற வருமான நம்மாழ்வாரின், தாமரை மலர்த் திருவடிகளும், பிறவியாகிய துன்பத்தை நீக்கக் கூடிய ஆற்றலை உடையன. நம்மாழ்வார் பாடிய திருவாய்மொழி மூன்றாவது சுடராகும். இதனால் சூரியன், சந்திரன் நம்மாழ்வார் இயற்றிய திருவாய்மொழி மூன்றும் முச்சுடர்களாகும்.

அருஞ்சொற்பொருள்

| | |
|---|---|
| சுடர் இரண்டு | – சூரியன், சந்திரன் |
| துகள் | – திருவடித்துகள் |
| சீப்பன | – போக்குவன |

| | |
|---|---|
| தீர்ந்துலகத்து | – குற்றமில்லாத உலகத்தில் |
| இடர் இரண்டு | – அறியாமை, மாயை |
| அடர் இரண்டு மலர்த்தாள் | – நெருங்கி வரும் இரு மலர்ப்பாதங்கள் |

இப்பாடலில் கம்பர் சுடர் இரண்டு, இடர் இரண்டு, அடர் இரண்டு என்று எதுகை மோனை யோடு பாடலை அமைத்துச் சிறப்பிக்கிறார்.

திருவாய்மொழி பாடிய நம்மாழ்வார் பல பாடல் களில் இரண்டு சுடராய் *(3255)* என்றும், சீர் ஆர் சுடர்கள் இரண்டுமாய் *(3341)* என்றும், நீள் சுடர் இரண்டும் *(3154)* என்றும், சூரியன், சந்திரனை குறிப் பிடுகிறார்.

மேலும் திருவாய்மொழியில் பராங்குச நாயகி என்னும் தலைவி, தன் தலைவனாகிய கண்ணபிரான் வருகையை எண்ணி வருந்தி, தன் தோழியை நோக்கி,

*''நேமியும் சங்கும் இருகைக் கொண்டு*
*பல்நெடும் சூழ்சுடர் ஞாயிற் றோடு*
*பால்மதி ஏந்தி ஓர்கோல நீல*
*நல்நெடும் குன்றம் வருவது ஒப்பான்*
*நான் மலர்ப் பாதம் அடைந்துவே.''*

*(நாலாயிரத் திவ்விய பிரபந்தம்.3691)*

என்று கூறுகிறாள். ''ஒரு நீலமலை சூரியன், சந்திர னாகிய இரு சுடர்களை ஏந்தி வருவது போல, கண்ண பிரான் சக்கரமும் சங்கும் ஏந்தி வரமாட்டானா? என்றும் கண்ணபிரானின் மலர்ப்பாதங்களை என்

நெஞ்சம் காணத் துடிக்கின்றது'' என்றும் பலவாறாகத் தலைவி தன் தோழியிடம் புலம்பிக் கூறுகிறாள்.

இவ்வாறு திருவாய்மொழியில் பல பாடல்களில் நம்மாழ்வார் சூரியன், சந்திரன், திருமாலின் திருவடிகளைச் சிறப்பித்திருப்பதைக் கண்ட கம்பரும், அதை யொற்றிச் சடகோபர் அந்தாதியில் பல பாடல்களில் சிறப்பிக்கக் காணுகின்றோம்.

## நுட்பமான தமிழிசை நூல் திருவாய்மொழி

(மூன்றாம் பாடல்)

*''பாவொடுக்கும் நுண்இசை ஒடுக்கும் பலவும் பறையும்*
*நாவொடுக்கும் நல் அறிவொடுக்கும் மற்றும் நாட்டப்பட்ட*
*தேவொடுக்கும் பரவாதச் செரு ஒடுக்கும் குருகூர்ப்*
*பூவொடுக்கும் அமுதத் திருவாயிரம் போங் தெனவே.''*

**கருத்து**

திருக்குருகூரில் வாழ்ந்த நம்மாழ்வாரின் திருவாயாகிய மலரினுள்ளிருந்து வெளிப்பட்ட அமுதம் போன்ற திருவாய்மொழிப் பாடல்கள் அனைத்தும் உலக மக்களுக்குப் பயனளிக்கத் தோன்றியவையாகும். அப்பாடல்கள் பாக்களின் இலக்கணத்தை எடுத்து இயம்புகின்றன. நுட்பமான தமிழிசையைத் தன்னுள் அடக்கிக் கொண்டிருக்கின்றன. வேறு தெய்வங்களை எல்லாம் பாடிக்கொண்டிருப்போரின் நாக்குகளால் தம்மையே வாழ்த்தும்படியான பேற்றினைத் தந்து கொண்டிருக்கின்றன. நம்மாழ்வாரையே சிந்திக்கின்ற அறிவினைத் தந்து கொண்டிருக்கின்றன. ஓம் நமோ நாராயணா என்ற தெய்வக் கொள்கைகளைப் பரப்பு

வதையே குறிக்கோளாக ஏற்கவைக்கும். பிற மதத்தினரோடு சொற்போராடி வெற்றி கொள்ளத் திறத்தை நல்கும்.

அருஞ்சொற்பொருள்

தேவொடுக்கும் – தெய்வக் கொள்கைகளை ஒடுக்கி விட்டன

பரவாத – பிறமதத்தினர் செய்த வாதங்களை

## தனம், தவம், அறம் தரும் திருவாய்மொழி

*(நான்காம் பாடல்)*

*''தனமாம்! சிலர்க்குத் தவமாம்! சிலர்க்குத் தருமநீறை*
*கனமாம்! சிலர்க்கு அதற்கு ஆரணமாம்! சிலர்க்கு ஆரணத்தின்*
*இனமாம்! சிலர்க்கு அதற்கு எல்லையுமாம்! தொல்லை ஏர் வகுள*
*வனமாலை எம்பெருமான் குருகூர் மன்னன் வாய்மொழியே!*

கருத்து

நம்மாழ்வார் அழகிய மகிழம்பூக்களால் தொடுக்கப்பட்ட மாலையை விரும்பி ஏற்பவர். அவர் திருக்குருகூர் அரசராவார். அவர் வாயிலிருந்து வெளிப்பட்ட திருவாய்மொழியைப் படிப்பதால் சிலருக்குச் செல்வச் சிறப்பு ஏற்படும். அரிய தவப் பயனாகச் சிலர்க்குத் திருவாய்மொழி திகழ்கிறது. அறம் செய்து மகிழ்ச்சியடையும் பேற்றினைச் சிலர்க்குக் கொடுக்கிறது. அற இன்பம் பெறுவதற்குரிய வேதமாகச் சிலர்க்குத் திகழ்கிறது. அவருடைய திருவாய்மொழி வேதங்களின்

தோற்றமாகவும், தொகுதியாகவும், வேத முடிவாகவும் விளங்கி வாழ்க்கைக்கு அரிய துணையாக உள்ளது.

அருஞ்சொற்பொருள்

ஆரணம் – வேதம்

ஏர்வகுள வனமாலை – அழகிய மகிழம் பூக்களால் தொடுக்கப்பட்ட மாலை

வாய்மொழி – திருவாய்மொழி (நூல்)

## தமிழ்மொழியின் சிறப்பும் திருவாய்மொழியின் கீர்த்தியும்

*(5ம் பாடல்)*

உலக மொழிகள் பலவற்றிலும் செம்மொழியாகப் போற்றப்படுவது தமிழ் மொழியாகும். தமிழில் எழுந்த நம்மாழ்வார் பாடிய திருவாய்மொழி இதற்கு சான்றாகும். வீடு பேறு அடைவதற்கு உகந்த வழிபாடான திருமால் வழிபாட்டைக் கூறுவது திருவாய்மொழியாகும். முக்தி நெறியின் வழிபாடாகத் திருவாய்மொழி திகழ்வதால் நரகக் குழிகள் பயன்படாமல் பாழாகி விட்டன. இதோ அதற்கான பாடல்:

*"மொழிபல ஆயின செப்பம் பிறந்தது முக்தி யெய்தும்*
*வழிபல வாய்விட்டு ஒன்றா அது வழுவா நரகர்*
*குழிபல ஆயின பாழ்பட்டது!"*

அருஞ்சொற்பொருள்

செப்பம் – செம்மொழி

## வேத சாரம் திருவாய்மொழி

(6வது பாடல்)

திருவாய்மொழிப் பாடல்கள் ஆழ்ந்த உட்பொருளை உணர்த்துவன. அதன் உண்மைகளை அறிந்தவர்கள் மதுரகவியாழ்வார் போன்ற சான்றோர்கள் ஆவார்கள். தமிழ் மொழி இயல், இசை, நாடக இலக்கணங்களைப் பெற்றது. அறிவு, பொருள், பரம்பொருள் என்னும் மூன்றையும் விளக்கும் வேத சாரமாகத் திகழ்கிறது திருவாய்மொழி, இதனை

*''தோன்றா உபநிடதப் பொருள், தோன்றலுற்றார் தமக்கும்*
*சான்றாம் இவை என்றபோது மற்றென் பலகாலும் தம்மின்*
*மூன்றாயினவும் நினைந்து ஆரணத்தின் மும்மைத் தமிழை*
*ஈன்றான் குருகைப்பிரான் எம்பிரான் தன் இசைக்கவியே!''*

அருஞ்சொற்பொருள்

| | | |
|---|---|---|
| மும்மைத்தமிழ் | – | இயல் இசை நாடக இலக்கணம் அமைந்த தமிழ் |
| மூன்றனையும் நினைந்து | – | சித்து, அசித்து, பரம் பொருள் மூன்றையும் மனதில் அறிந்து |
| தோன்றலுற்றார் | – | தோன்றச் செய்த மதுர கவி ஆழ்வார் போன்ற சான்றோர்கள் |
| ஆரணம் | – | வேதசாரம் |

## திருவாய்மொழியின் சிறப்பு

*(14வது பாடல்)*

அழிவற்ற வேதங்களின் ஆழமான அரிய கருத்துக் களை, நம்மாழ்வார் திருவாய்மொழியில் செந்தமிழ்ப் பாடல்களாக ஆக்கித் தந்துள்ளார். அவ்வாறு நம்மாழ்வார் செய்த தொண்டினால்தான் அந்தணர்கள் தொடர்ந்து கோயிலில் திருவிழாக்களை நடத்தி வருகின்றனர். இதனை,

*''அந்தம் இலாமறை ஆயிரத்து ஆழ்ந்த அரும்பொருளைத்*
*செந்தமிழாகத் திருத்திலனேல் நிலத் தேவர்களும்*
*தந்தம் விழாவும் அழகும் என்னாம்!''*

என்று குறிப்பிடுகிறார் கம்பர்.

அருஞ்சொற்பொருள்

அந்தம் இலா – அழிவற்ற

## பிறப்பு என்னும் நோயை நீக்கும் மருந்து திருவாய் மொழி

*(17வது பாடல்)*

கம்பர் தம்மை நொந்து கூறுகின்ற பாடலாகக் கீழ்க்கண்ட பாடலைக் காண்கின்றோம்.

*''நாய்போல் பிறர்கடை தோறும் நுழைந்து அவர் எச்சில் நச்சிப்*
*பேய்போல் திரியும் பிறவியினேனைப் பிறவியெனும்*
*நோய்போம் மருந்தென்னும் நுன்திரு வாய்மொழி நோன்குவித்துத்*
*தாய்போல் உதவிசெய் தாய்க்கு அடியேன் பண்டென் சாதித்ததே.''*

''நாயைப் போல பிறருடைய வீட்டு வாயில்களில் புகுந்து அவர்கள் வீசிய எச்சிலை விரும்பித் தின்று பேயைப் போல அலைந்து திரிகின்ற இழிந்த பிறப்பை உடையவன் நான். இத்தகையவனைப் ''பிறப்பு என்னும் நோயை நீக்கும் மருந்து'' ஆகிய உம்முடைய திருவாய்மொழி என்னும் புனித நூலைப் படிக்கச் செய்து, பெற்ற தாயைப் போல உதவி செய்தாய். எல்லாம் உதவிய உமக்கு அடியவனான நான் முன்பு செய்த நன்மை என்னவோ?'' என்று கம்பர் நம்மாழ்வாரைப் போற்றிக் கூறுகிறார்.

## பாடும் ஆற்றல் பெற்ற புலவர்களுக்கு வேண்டுகோள் (35வது பாடல்)

புலவர்கள் கவியாற்றல் பெற எழுத்திலக்கணம், சொல்லிலக்கணம், யாப்பிலக்கணம் பயின்றறிந்திருத்தல் வேண்டும். அணி இலக்கணத்தில் சிறப்பாற்றல் வெளிப் படும். இதை நன்கறிந்தவர் கம்பர்.

''எழுத்துப் புணர்ச்சி இலக்கணத்தில் நன்கு அறிய சொல்லிலக்கணம், அறிய வேண்டும். பொருள் இலக் கணத்தையும் புரிந்து, அணி இலக்கணத்திலும், தேர்ச்சி பெற்ற புலவர்களே! நீங்கள் திருக்குருகூர் சென்று, திருமாலை வணங்கி, அங்குத் தொண்டு செய்துவரும் நம்மாழ்வாரை வணங்குங்கள், மேலும் நம்மாழ்வாரை வணங்கும் அடியவர்களையும் வணங்கி அங்குத் தொண்டு ஆற்றுங்கள். இதுவே உங்கள் உயிர் உய்தி பெறுவதற்குச் சிறந்த வழியாகும்'' என்று புலவர் களுக்குக் கம்பர் வேண்டுகோள் விடுக்கிறார். அப்பாடல் பின்வருமாறு:

*''சந்தியும், சந்திப்பதமும், அவை தம்மிலே தழைக்கும்*
*பந்தியும், பல் அலங்காரப் பொருளும் பயிலுகிற்பீர்!*
*வந்தியும், வந்திப்பவரை வணங்கும் வகையறிவீர்!*
*சிந்தியும் தென்குருகூர் தொழுது ஆட்செய்யும் தேவரையே!''*

அருஞ்சொற்பொருள்

| | | |
|---|---|---|
| சந்தி | – | எழுத்துப் புணர்ச்சி |
| பதம் | – | சொல் |
| பந்தி | – | யாப்பு |
| வந்தி | – | அடியவர்கள் |
| தேவரை | – | நம்மாழ்வாரை |

### நவில்தோறும நூல்நயம் சுரக்கும் திருவாய்மொழி
### *(63வது பாடல்)*

வெண்காந்தளின் பெரிய கிழங்குபோல் உரிக்க உரிக்க உள்ளீடு இல்லாத நூல்கள் பலவாகும். எனினும் தோண்டுகின்ற மணற்கேணிபோல் படிக்கப் படிக்க உண்மைப் பொருளை உணர்த்தி இறைமையை வெளிப்படுத்தும் நுட்பநூல் நம்மாழ்வார் பாடிய திரு வாய் மொழியாகும். இதனை,

*''உரிக்கின்ற கோடலின் உந்துகந்தம் என ஒன்றுமின்றி*
*விரிக்குந்தோறும் வெறும் பாழாய் விடும் பிறர்புன்கவி, மெய்*
*தெரிகின்ற கோச் சடகோபன் தன் தெய்வக் கவி, புவியில்*
*கரிக்கின்ற நுண்மணல் ஊற்றொக்கும் தோண்டச்*
*சுரத்தலினே.''*

அருஞ்சொற்பொருள்

| | | |
|---|---|---|
| கோடல் | – | வெண்காந்தள் |
| உந்துகந்தம் | – | உரித்தெடுக்க |
| புன்கவி | – | கீழ்மையுற்ற பாடல் |
| கரிக்கின்ற | – | உறுத்துகின்ற |

### புலவர்களே! திருக்குருகூரைப் போற்றிப் பாடுங்கள் (64வது பாடல்)

திருக்குருகூர் மருத நிலத்தைச் சார்ந்தது. அங்குள்ள வயல்களில் முதிர்ந்து நீண்ட கரும்புகள் விளைகின்றன. கரும்புத் தண்டிலே தேன்கூடுகள் உள்ளன. வாய்க்காலில் உள்ள கயல்மீன்கள் துள்ளிப் பாய்வதால் தேன் கூடுகள் உடைந்து தேன் சிந்தும். தேனும் நீரும் வயல்களில் பாய்கின்றன. இப்படிப்பட்ட வயல்ளை உடைய திருக்குருகூரில் நம்மாழ்வார் பிறந்தார். அந்த ஊரைப் போற்றிப் பாடுங்கள்! பாடியோர்க்கு செல்வம் வந்து கூடும். வறுமை நீங்கும். அறியாமை – மயக்கம் இரண்டும் நீங்கும். வாழ்வில் எல்லாச் சிறப்புகளும் பெறுவீர்கள். இப்படிப் பாடுகிறார் கம்பர். இதோ பாடல்,

*"சுரக்கும் திருவும்! வறுமையும் தீரும்! தொடக்கு விட்டுக்*
*கரக்கும்! இருவினை மேன்மையும் காணும்! கயல் குதிப்பத்*
*திரக்கும் கழைநெடுந் தாளில் தொடுத்த செந்தே னுடைந்து*
*பரக்கும் பழனவயல் குருகூர் வளம் பாடுமினே!"*

அருஞ்சொற்பொருள்

| | |
|---|---|
| குருகூர் வளம் பாடுமினே | – திருக்குருகூரின் வளத்தைப் பாடுங்கள் |
| திரக்கும் கழை | – முதிர்ந்த கரும்பு |
| பரக்கும் பழனவயல் | – பரவிய மருதநில வயல்கள். |

## ஆடலழகி மதங்கி
(70வது பாடல்)

கலம்பகத்துள் ஓர் உறுப்பு மதங்கி என்பது ஒன்றாகும். ஆடலிலும் பாடலிலும் வல்ல இளம்பெண் கூத்தையும் சடகோபர் அந்தாதியில் புகுத்தியுள்ளார் கம்பர். அவள் தன் இரு கைகளிலும் வாளை எடுத்துச் சுழற்றிக் கொண்டே தானும் ஆடப் போகின்றாள்.

*''தொடங்குகின்றாள் நடம், சொல்லுகின்றேன் குருகூரர் தொழா*
*மடங்குகின்றாள் மண்டலம் சுற்றி யாடுகிறாள், தங்கி*
*விடங்கு கண்டார் பிழைப்பார் சுவையீர் விரைந்து ஏகும்.''*

கருத்து

''மதங்கி என்னும் ஆட்டக்காரி திருக்குருகூரில் தோன்றிய நம்மாழ்வாரை முதலில் தொழுதுவிட்டுத் திரைக்குள் சென்றுவிட்டாள். இன்னும் சிறிது நேரத்தில் திரை விலகவும், சுற்றிச் சுற்றி ஆடத் தொடங்குவாள். அப்போது அந்த மதங்கியின் அழகைக் கண்டோர் காதல் நோயினால் பீடிக்கப்பட்டு இறந்து

விடுவார்கள். எனவே ஆட்டம் தொடங்குமுன் இங்கிருந்து சென்று விடுவீர்!'' என்று ஒருவன் திரை யரங்கம் முன்வந்து சொல்லுகிறான்.

கம்பர் அந்தாதியில் இப்படி ஒரு புத்துயிருட்டும் நிகழ்ச்சியைப் புகுத்தியிருப்பது பாராட்டுக்குரியதாகும்.

அருஞ்சொற்பொருள்

மடங்குகின்றாள் – திரும்பிச் செல்கின்றாள்

விடங்கு – உடலழகு

## குருகூர் கற்பகத்தை (நம்மாழ்வாரை) வழிபடுவோம்
(72வது பாடல்)

திருக்குருகூரில் பிறந்த கற்பகம் போன்றவர் நம்மாழ்வார். அவர் பொய்வாதம் செய்யும் பிற மதத்தைச் சார்ந்த புலவர்களின் வாயை அடைக்கும் பூட்டு ஆவார். சமணர் தம் மாறுபாடான கருத்தைச் சிதைக்கும் கூரிய வாளாவார். உலகில் வாழும் உயிர் களுக்கு நிலைத்த உறுதிப்பாட்டைக் கூறும் ஆட்சியர் ஆவார். அடியவர்களுக்குப் பேரின்ப வெள்ளம் போன்றவர். யாவர் செயலையும் தமது கூரிய அறிவால் அறியத் தக்கவர். எனவே எல்லோரும் அவரை வழி படுவோம். இதனை,

*''பூட்சி கண்டீர் பொய்ச்சமயப் புலவர்க்குப் போக்குவல்லாய்!*
*வாட்சி கண்டீர் மற்றை மாயத்து அருகர்க்கு! மண்உயிர்கட்கு*
*ஆட்சி கண்டீர்! தொண்டர்க்கு ஆனந்தவாரி கண்டீர்!*
*அறிவைக்*
*காட்சி கண்டீர், பரவும் குருகூர் வந்த கற்பகமே!''*

அருஞ்சொற்பொருள்

| | | |
|---|---|---|
| பூட்சி கண்டீர் | – | பூட்டு என்பதை அறிக |
| வாட்சி கண்டீர் | – | வாள் என்பதைத் தெளிக |
| ஆட்சி கண்டீர் | – | ஆட்சியர் என்பதை அறிவீர் |
| காட்சி கண்டீர் | – | கண்டு அறியச் செய்வீர் |

## நம்மாழ்வார் பெருமையும் திருவாய் மொழிச் சிறப்பும் (100வது பாடல்)

அன்பு மனைவியும், பொருட்செல்வமும் மக்கட் பேறும் இல்லற வாழ்வும் சிறக்கச் செய்பவர் நம்மாழ் வார். அருளென்று வைணவர் ஏற்கும்படி தோன்றியவர் நம்மாழ்வார். அவர் இயற்றிய திருவாய்மொழியைப் படிப்போர் அறியாமை என்னும் இருளை விலக்குவர். மெய்ப்பொருள் உண்மை அவர்களுக்குப் புலனாகும். உயிர்களின் இருவினை நீங்கும். வேதங்களின் பொருளை நன்கு அறிந்து கொள்வர். இதனை,

''மனையும் பெருஞ்செல்வமும் மக்களும் மற்றை வாழ்வும் தன்னை
நினையும் பதம்என நின்றபிரான் குருகூர் நிமலன்
புனையும் தமிழ்க்கவியால் இருள் நீங்கிப் பொருள் விளங்கி
வினையும் திரிவுற்றன! குற்றம் நீங்கின! வேதங்களே.''

முதற்பாடலில் ''வேதங்கள்'' என்று தொடங்கி, 100வது பாடலாகிய இப்பாடலை ''வேதங்கள்'' என்ற சொல்லால் அந்தாதியை நிறைவு செய்கிறார் கம்பர்.

# 5. சடகோபர் அந்தாதியில் களவும் கற்பும்

கம்பர் இயற்றிய சடகோபர் அந்தாதியிலுள்ள 100 பாடல்களில் இடையிடையே வருகின்ற 28 பாடல் களில் அகத்திணை இயலின் அகச்சுவை காட்சிகளைக் கம்பன் படைக்கக் காணுகின்றோம்.

தலைவனும், தலைவியும் ஒருவரையொருவர் எதிர் வந்து காதல் கொள்கின்றனர். இரவில் களவு நடக் கிறது. பிரிந்து செல்கின்றனர்.

தலைவன் தன் தோழனிடம் காதலியின் முக அழகு, உடல் அழகையும் விவரித்து நலம் பாராட்டிக் கூறுகிறான். அதுபோல் தலைவி தன் தோழியிடம் தனக்கும் தலைவனுக்கும் நடந்த நிகழ்ச்சியை எடுத்துக் கூறுகிறாள்.

தோழி தலைவனிடம் தலைவியை மணந்து கொள்ளுமாறு கூறுகிறாள். மேலும் அறத்தொடு நிற்றல் முறையில் தலைவனுக்கும் தலைவிக்கும் நடந்த களவினைச் செவிலிக்கு எடுத்துக் கூறுகிறாள். செவிலியும் தலைவியின் களவுச் செய்தியை அறிந்து அறத்தொடு நிற்றல் முறையில் தலைவியின் நற்றாய்க்குக் கூறு கிறாள்.

தோழி தலைவனிடம் தலைவியைத் திருமணம் செய்து கொள்ளுமாறு கூறுகிறாள். தலைவன் பொருள் தேடக் தலைவியை விட்டுப் பிரிகிறான்.

தலைவனின் பிரிவாற்றலால் தலைவி மாலைப் பொழுதைக் கண்டு கண்ணீர் விட்டுக் கலங்குகிறாள். தென்றல் காற்றை வெறுத்துக் கூறுகிறாள். இரவுப் பொழுதை எண்ணி வருந்துகிறாள். அன்றில் பறவை ஒலியைக் கேட்டு அதிர்ச்சி அடைகிறாள்.

தலைவன் தலைவியிடம் கொண்ட காதலை ஊரார்க்கு அறிவிக்க மடலேறத் துணிகிறான். இங்குக் கம்பரும் தலைவி மடலேறத் துணிவதை எடுத்துக் கூறுகிறார். தலைவி மடலேறத் துணிவதைக் கண்டு தோழி வருந்துகிறாள்.

செவிலித்தாய் தலைவி, தலைவன் நிகழ்ச்சியைக் கூறித் திருமணத்திற்கு ஏற்பாடு செய்ய நற்றாயிடம் கூறுகிறாள். தலைவன் தலைவியைத் திருமணம் செய்ய திருக்குருகூருக்கு அழைத்துச் செல்லுகிறான்.

கம்பர் அகத்திணைக் காட்சிகளையும், நிகழ்ச்சி களையும் நம்மாழ்வார் அவதரித்த திருக்குருகூரை மையமாகக் கொண்டு 28 பாடல்களைச் சடகோபர் அந்தாதியில் அமைத்துள்ளார்.

இதேபோல் நம்மாழ்வாரைத் தலைவனாக எண்ணித் தலைவி வருந்துவதாகவும் சில பாடல்களைக் கம்பர் அந்தாதியில் படைக்கக் காணுகின்றோம்.

இப்பொழுது அகச்சுவை பொருந்திய பாடல்களில் மூன்றை மட்டும் அறிவோம்.

## அறத்தொடு நிற்கும் தோழி செவிலிக்குக் கூறுதல்
### (36வது பாடல்)

தலைவனாகிய நம்மாழ்வார் மீது காதல் கொண்டு களவொழுக்கமேற்ற தலைவி வாடுகின்றாள். உடல் நிலை மாறுபடுகிறது. காரணம் தெரியாத நிலையில் இதனை அறிந்த செவிலித் தாயார் குறிசொல்பவளை அழைத்து தலைவியின் கைகளைக் காட்டச் செய்து குறி கேட்கிறாள். பின்பு, வெறியாடும் வேலனை அழைத்து தலைவியின் நிலையை அறிய எண்ணுகிறாள். அப்பொழுது தலைவியின் தோழி உண்மை நிலை அறிந்து கீழ்க் கண்ட செய்தியைச் செவிலியிடம் கூறுகிறாள்.

*''தேவரை ஏறிய மூதறி வாட்டியைச் சீரழித்தீர்*
*பூவரை ஏறிய கோதையுள்ளம் புகுந்தார் எவர்என்*
*தேறவரை ஏறி மொழிகின்றபோது இயம்பிற்று இறைவர்*
*மூவரையோ குருகூரரையோ சொல்லும் முத்துறவே.''*

தோழி செவிலியை நோக்கி,

தெய்வம் ஏறிய முதிர்ந்த அறிவுடையவளான குறி கூறுபவள் சொன்ன பொருளை உணராமல் அவளின் சிறப்பைக் கெடுத்துவிட்டீர்கள். மலர்களை அணிந்த கூந்தலையுடைய இத்தலைவியின் மனத்திலே புகுந்து வருத்துபவர் நம்மாழ்வாரே என்று பாண்மகள் கூறியதைக் கேட்டு அறிந்தீர்கள். எனவே என்னிடம் கூறுங்கள். அந்தப் பாண்மகள் கூறியது மும்மூர்த்திகளையா? திருக்குருகூரின் நம்பியான நம்மாழ்வாரையா? உண்மையைக் கூறுங்கள் என்று செவிலியாகிய வளர்ப்புத் தாயை நோக்கி தோழி கூறினாள்.

அருஞ்சொற்பொருள்

| | |
|---|---|
| தேவரை ஏறிய மூதறிவாட்டி | – தெய்வம் ஏறிய முதிர்ந்த அறிவுடைய |
| பூவரை ஏறிய கோதை | – மலர்கள் அணிந்த கூந்தலையுடைய தலைவி |
| மூவர் | – மும்மூர்த்திகள் |
| ஏவரை | – பாண்மகளை |

‘சடகோபரே காதலியைக் கைவிடாதே’
(85வது பாடல்)

திருக்குருகூரில் வாழும் தலைவன் நம்மாழ்வார். நம்மாழ்வாரை எண்ணி தலைவி வருந்துகிறாள். அவரைத் திருமணம் செய்து கொள்ள எண்ணுகிறாள். இதைத் தோழியிடம் தெரிவிக்கிறாள் தலைவி. உடனே தோழி தலைவனாம் நம்மாழ்வாரிடம் கூறுகிறாள்.

*“கருத்தில் கருணை வைத்தேகும் இதுவும் கலைமறையோர்*
*திருத்திற்று ஒருமணம் தீரும் நீரின் நிறை*
*முருத்தின் செருந்து அயலே இவளோடு முயற்கரும்பின்*
*குருத்தில் பிரசம் வைக்கும் குருகூர் சென்று கூடுமினே.”*

கருத்து

தோழி தலைவனாகிய நம்மாழ்வாரை நோக்கி, “தலைவனே! கோரைகள் சூழ்ந்த கரும்புகளின் குருத்துக்களில் தேனீக்கள் கூடு கட்டியுள்ளன. இப்படிப்பட்ட வயல் சூழ்ந்த உங்களுடைய திருக்குரு

கூருக்கு நீ காதலித்த பெண்ணிடம் பரிவு காட்டி அழைத்துச் சென்று திருமணம் செய்து கொள்வாயாக! என்று கூறினாள்.

அருஞ்சொற்பொருள்

கருத்தில் – உள் மனத்தில்

கருணை – பரிவு

கலை மறையோர்
திருத்தி இற்று – திருமண நூல் வல்ல மறையோர் அமைத்துத் தந்துள்ள

## பந்தடிக்கும் ஒரு பெண்ணின் அழகைக் கம்பர் கண்டு மனம் துடித்தல்

*(43வது பாடல்)*

நம்மாழ்வார் தோன்றிய திருக்குருகூரில் வஞ்சிக் கொடி போன்ற ஒரு பெண்ணின் கொங்கைகள் பருத்து நெஞ்சிடம் முழுவதும் ஆட்கொண்டன. அவள் தலையில் பூங்கொத்துக்கள் சூடப்பெற்றுள்ளன. அவள் பந்து விளையாடுகிறாள். அவளுடைய பூக்கள் சூடிய கூந்தலும் ஆடையும் நிலைகுலைந்து தளர்ந்துபோக கொங்கைகளின் சுமை தாங்காது அவளுடைய இடை என்ன ஆகுமோ? இற்றுப் போகுமோ? என்று அவள் ஆடும் நிலையில் என்னுடைய மனமும் துடிதுடிக்கிறது. அவளுடைய இடைக்கு அவற்றைத் தாங்கும் வன்மை

உள்ளதா? ஆசையோடு கலக்கமடைகிறார் கம்பர். இதோ அப்பாடல்.

''வந்து அடிக்கொண்டன கொங்கைகள் மாறன் குருவை வஞ்சி
கொந்து அடிக்கொண்ட சூழலும் கலையும் குலைந்து அலைய
பந்து அடிக்குந் தொறும் நெஞ்சம் பறை அடிக்கின்றது என்றால்
செந்தடித் தன்ன மருங்கிற்கு உண்டோ நிற்கும் சிக்கனவே.''

அருஞ்சொற்பொருள்

| | |
|---|---|
| கொந்து அடிக்கொண்ட சூழல் | – பூங்கொத்துக் களைச் சூடிய கூந்தல் |
| கலை | – ஆடை |
| மருங்கு | – இடை |
| செந்தடித்தன்ன | – பறையடித்தல் போல |

முடிவுரை

கம்பர் இராமகாதையை அரங்கேற்றுமுன் நாலாயிரத் திவ்வியப் பிரபந்தங்களில் புகுந்து நம்மாழ்வார், மதுரகவியார் இயற்றிய தேன்சுவைப் பாக்களைக் கற்றறிந்தவர். ஆழ்வார்களின் வரலாறுகளைத் தெரிந்தவர். இராமாயணத்தில் காணாத அகத்திணை, புறத்திணைப் பிரிவுகளை நம்மாழ்வார் பிரபந்தங்களில் கண்டு சுவைத்தறிந்தவர். காதல் களவு சுவைகளை நனி சொட்டச் சொட்ட சடகோபர் அந்தாதியில் வாசகர்களுக்குச் சுவைக்கத் தந்துள்ளார்.

சடகோபர் அந்தாதியைக் கம்பர் ஏட்டில் எழுதியே அரங்கேற்றம் செய்துள்ளார். கம்பர் தன் இராமாயணத்தை இயற்றிய பிறகே சடகோபர் அந்தாதியை இயற்றினாலும், முன்னர் அரங்கேற்றியது சடகோபர் அந்தாதியைத்தான் என்பதை அறிகிறோம். கம்பரின் கைவண்ணமும் வாக்கொளிர்வும் கொண்ட சடகோபர் அந்தாதியைச் சுவைத்தருந்துவோமாக.



# 6. கம்பராமாயணத்தில் கருடபகவான் துதியும் பிரதியுபகாரம் கருதாத் தொண்டும்

## முன்னுரை

கம்பராமாயணத்தில் இடம் பெற்ற நாகபாசப் படலம் ஓர் எழுச்சியூட்டும் படலமாகும். அப் படலத்தில் படிப்போர் நெஞ்சை உருகவைக்கும் பாத்திரம் கருடாழ்வார் ஆவார். சிறிய பாத்திரப் படைப்பு என்றாலும் தானாக வந்து ராமநாமத்தைத் துதித்தும், தன்னலங் கருதாது புரியும் தொண்டும் படிப்போர் மனத்தைக் குலைய வைக்கும் நிகழ்ச்சி யாகும்.

"பயன் தூக்கார் செய்த உதவி நயன் தூக்கின்
நன்மை கடலிற் பெரிது. —குறள்

கருடாழ்வாரின் மகத்துவத்தை அறிய, தொடர் புடைய நிகழ்ச்சியை முதலில் அறிவது முக்கியத்துவ மாகும்.

## இந்திரஜித் போர்க்களத்தில் தனியன் ஆதல்

போர்க்களத்தில் இலக்குவன் அனுமன் தோள்மீது ஏறிநின்று போர் செய்தான். அம்புகளைத் தொடர்ந்து பெய்து இந்திரசித்தின் கவசத்தை வெட்டித் தள்ளி னான். அப்போது தன்னை நெருங்கி வந்த இரண்டு

அரக்கர்களின் தண்டாயுதத்தை அனுமன் பிடுங்க, அவர்கள் பயந்து ஓடினார்கள். அங்கதன், குமுதன், நீலன், ஜாம்பவான், சுக்கிரீவன், மயிந்தன், துவிவிதன் ஆகியோர் இந்திரசித் மீது மலைப் பாறைகளைத் தூக்கி வீச, அவற்றையெல்லாம் இந்திரசித் பொடிப்பொடி யாக்கினான். மீண்டும் அவர்கள் விடாது மரங் களையும், கற்களையும் சொரிந்து கொண்டு அருகில் வந்தனர். ஆயுதம் யாதும் இலாது இந்திரசித் தனியன் ஆனான். அப்போது சூரியன் மேல் திசையில் மறைந் தான். இருள் பரவியது. இலக்குவன் இந்திரசித் ஏறி வந்த அழகிய தேரை அம்பெய்து அழித்தான்.

### இந்திரசித் ஆகாயத்தில் சென்று அணு உடலைப் பெறுதல்

தேரை இழந்த இந்திரசித், நாக பாசத்தால் இவர் களைக் கட்டிப் போட்டால் அழிந்து விடுவார்கள் என்று எண்ணி வில்லுடன் ஆகாயத்தில் சென்றான்.

ஆகாயத்தில் வேகமாகப் பறந்து சென்ற இந்திரசித், இனி யாது செய்வானோ? என்று கலங்கிய தேவர்கள் ஆங்காங்குச் சிதறி ஓடினார்கள். அப்போது இந்திரசித்,

*"அணுவெனச் சிறியது ஆங்கோர்*
*ஆக்கையும் உடையன் ஆனான்"*

அணுவைப் போன்ற சிறிய உடலை எடுத்தான் இந்திர சித். அப்போது மாயமாய் மறைந்த இந்திரசித்தின் மாயச் செயலை அறியாத வானர வீரர்கள் அவன் போர் புரியமாட்டாது சென்றுவிட்டான் என்று எண்ணினர். இலக்குவன் களைப்படைந்து இளைப் பாறினான்.

### இந்திரசித் நாகாஸ்திரத்தைப் பிரயோகித்தல்

அணுவைப் போன்ற உடலை எடுத்த இந்திரசித்,

''வாங்கினான், மலரின் மேலை
வானவன் வானக் கங்கை
தாங்கினான் உலகம் தாங்கும்
சக்கரத் தவன்என் றாலும்
வீங்குவான் தோளை வீக்கி
வீழ்த்தலான் மீள்கி லாத
ஓங்குவாள் அரவின் நாமத்து
ஒருதனிப் படையை உன்னி''

### பாடலின் பொருள்

திருமாலின் நாபிக் கமலத்தின் மேலுள்ள பிரம்மனேயானாலும், ஆகாய கங்கையைத் தன் சடைமேல் கொண்ட சிவபெருமானே ஆனாலும், சக்கராயுதத்தையுடைய திருமாலே ஆனாலும் அவர் களுடைய பருத்த தோள்களை இறுக்கிக் கட்டுவ தோடல்லாமல் அவர்களை விட்டு அகலாது ஒட்டிக் கொள்ளும் திறத்தையுடைய, கொடிய நாகத்தின் பெயரைக் கொண்ட நாகாஸ்திரத்தை, அணுவாக ஆன இந்திரசித் சிந்தித்து அபிமந்திரித்து எடுத்தான்.

(வாங்கினான் = எடுத்தான்)

### நாகாஸ்திரத்தால் கட்டுண்டோர் நிலை

நாகாஸ்திரத்தை எடுத்த இந்திரசித் போர்க் களத்தை நோக்கி அதை விடுத்தான். அந்தக் கொடிய நாகாஸ்திரம் பத்துத் திசைகளின் இருளையும் திரித்து

முதற்கண் விரைந்து சென்று களைப்படைந்த இலக்கு வனுடைய திரண்ட தோள்களை வருந்தும்படி வளைத்துச் சுற்றியது. வலிமை குன்றி இலக்குவன் ஆகாயத்தைப் பார்த்தான்.

அப்போது இந்திரசித்தைத் தேடிப்பிடிப்பேன் என்று ஆகாயத்தில் பறந்த அனுமனையும் நாகாஸ்திரம் கட்டிப்பிடித்துக் கீழே தள்ளி இறுக்கியது. எப்படி என்றால்,

''ஏல்புடைப் பாச மேனாள்
இராவணன் புயத்தை வாலி
வால் பிணித்து என்னச் சுற்றிப்
பிணித்தது வயிரத் தோளை''

பாடல் பொருள்

முற்காலத்தில் இராவணனது தோள்களை வாலியின் வால் சுருட்டிக் கட்டியது போல, மேலே சென்ற அனுமனது உறுதியான தோள்களை நாகாஸ் திரம் சூழ்ந்து கட்டியது.

அடுத்து, வாள்போன்ற பற்களையுடைய பாம்பு களால் ஆன நாகாஸ்திரமானது மற்ற வானர வீரர்கள் அனைவரையும் சூழ்ந்து கொள்ள, வானர வீரர்கள் தங்கள் தோள்கள் முறிந்து போயின என்று முறையிடும் படியாக அனைவரையும் அழுத்திப் பிணித்தது. அங்கதனையும் விடாது கட்டியது. அதனால் தாக்கப் பட்ட வானர வீரர்கள்,

''மலையென எழுவர்; வீழ்வர்
மண்ணிடைப் புரள்வர் : வானில்

தலைகளை எடுத்து நோக்கித்
தழல்எழ விழிப்பர்''

(நாகாஸ்திரத்தால் கட்டப்பட்ட வானர வீரர்கள் மலைகள் மேல் எழுந்தாற்போல் எழுந்தார்கள். ஆனால் கீழே விழுந்தார்கள். தரையில் புரண்டார்கள். வானத்தை நோக்கி நெருப்புப் பொறி பறக்க கண்களை விழித்தார்கள்)

நாகாஸ்திரத்தால் தாக்குண்ட வானர வீரர்கள் உதடுகளைக் கடித்தார்கள். இலக்குவனுக்கும் இத் துன்பம் ஏற்பட்டு விட்டதே என்று கொதித்தார்கள். கலங்கினார்கள்.

அப்போது வானிலிருந்த இந்திரசித், நாகாஸ் திரத்தைப் பிரயோகித்ததோடு மட்டுமல்லாமல் மின்னல் அமைந்தது போலப் புகையையும், தீப்பொறி களையும் கக்கிக் கொண்டு செல்லும் அம்புகளையும் அனுப்ப, அவை வானர வீரர்களின் முதுகில் தைத்து ஊடுருவி மார்பிலும் பாய்ந்தன. இதனால் இரத்த வெள்ளம் எங்கும் பெருக்கெடுத்தது. அனைவரின் உடலிலிருந்து பெருகிய இரத்தம் வெயில் போல் தோன்ற, தேவலோகத்திலிருந்து தவறிக் கீழே விழுந்த சூரியனைப் போல போர்க்களம் காட்சியளித்தது.

இந்திரசித் அரண்மனை வருதல்

தான் அனுப்பிய நாகாஸ்திரத்தால் வானர சேனை ஒழிந்தது என்று எண்ணிய இந்திரசித் மங்கல ஒலி முழங்க, இராவணனது அரண்மனைக்கு வந்து சேர்ந் தான்.

அதைக் கண்ட சுவர்க்கலோகத்து மாதர்களும், மற்றைய உலகத்து மாதர்களும் அழகிய கைகளில் விளக்குகளை ஏந்தி வந்து, இசையுடன் பல்லாண்டு பாட, அரக்க மகளிர்கள் வாழ்த்தொலிக்க இராவணனது அரண்மனையை இந்திரசித் வந்தடைந்தான். அரண்மனை வந்தடைந்த இந்திரசித் தன் தந்தை இராவணனிடம் நடந்த செய்திகளைத் தெரிவித்து, ''இப்போது இளைப்பாறச் செல்லுகிறேன்'' என்று கூறித் தன் இருப்பிடம் சேர்ந்தான்.

### விபீடணன் செய்தியறிந்து வருதல்

இலக்குவனனையும், அனுமன் மற்றும் வானர வீரர்களையும் பற்றிய நாகாஸ்திரம், வேறு இடத்தில் போர் செய்து கொண்டிருந்த விபீடணனைப் பற்ற வில்லை.

இலக்குவனுக்கு நேர்ந்த இன்னலை அறிந்த விபீடணன், விரைந்து வந்து, செய்வதறியாது, மத்தினால் கடையப்பட்ட தயிர்போல் மனங்கலங்கி,

''இரங்கத்தக்க நான் இறந்தேனும், இல்லாது வலியனாய் நிற்கிறேனே!'' என்று கலங்கி தரையில் விழுந்து புரண்டு, வாய்விட்டுக் கதறினான்.

### இராமபிரான் செய்தியறிந்து போர்க்களம் வருதல்

அப்போது விபீடணனின் மந்திரிகளில் ஒருவனான அனலன் அங்கு வந்து நிலை கலங்கி, அச்செய்தியை விரைந்து சென்று இராமபிரானிடம் கூறினான். அது கேட்டு இராமபிரான் துன்பக் கடலில் மூழ்கினார்.

வாய் திறந்து சொல்ல முடியாமல் புலம்பினார். விரைந்து போர்க்களம் வந்தார். போர்க்களத்தில் இருளை நீக்க ஆக்னேய அஸ்திரத்தைப் பிரயோகித்து எங்கும் ஒளி பரவச் செய்தார். உயிர்களை எல்லாம் பிரளய காலத்தில் சிவபெருமான் கடலினால் கைக் கொள்ளப்பட்டது போன்ற போர்க்களத்தைக் கண்டான்.

இரத்த வெள்ளம் பெருக்கெடுக்க பிணங்களாகிய சேற்றின் நடுவில் தம்பியாகிய இலக்குவனைக் கண்டார் இராமபிரான். கண்ட அளவிலே, இலக்கு வனின் உடம்பின் மேல் விழுந்து வருந்தி அழுதார். வெம்மையாகப் பெருமூச்சு விட்டார். ''இலட்சு மணா!'' என்று பலமுறை கூவியழுதார்.

**விபீடணன் அனைவரையும் தேற்றுதல்**

இராமபிரான் பலவாறு புலம்புவதைக் கண்ட விபீடணன் அருகில் வந்து,

*''இன்னுயிர் துறந்தார் இல்லை!*
*இறுக்கிய பாசம் இற்றால்*
*புல்நுனைப் பகழிக்கு ஓயும்*
*தரத்தரோ புலம்பி என்னை''*

''எமது தலைவனே! போர்க்களத்தில் கட்டுண்டு இருக்கும் நம்மவர் யாவரும் உயிர் நீங்கியவர்கள் இல்லை. கட்டியுள்ள நாகபாசம் ஒழிந்தால் யாவரும் உயிர் பெற்று எழுவார்கள். அவர்கள் மீது பாய்ந்த புல்லிய நுனியை உடைய அம்புகளுக்கு வலிமை இழக்கச் செய்தால் யாவரும் பிழைப்பார்கள். பயமில்லை'' என்று கூறினான்.

அப்போது இராமபிரான் விபீடணனை நோக்கி, நாகாஸ்திரத்தின் தோற்றம் பற்றிக் கூறுவாயாக!'' என்று கேட்டார்.

அப்போது விபீடணன், "இந்தப் பிரம்மாஸ்திரம் முதலில் பிரம்மன் தான் செய்த யாகத்தில் உண்டானதாகும். அதனைப் பிரம்மனிடமிருந்து சிவபெருமான் பெற்றார். இந்திரசித் பெற்ற தவத்தின் பயனாக அதனைச் சிவபெருமான் இந்திரசித்துக்குக் கொடுத்ததாகும். இதனை இந்திரசித் முன்பு ஒரு தடவை அனுமன் சீதையைத் தேட சென்றபோது, அனுமன் மீது பிரயோகித்தான். ஆனால் அதிலிருந்து அனுமன் தப்பித்தான். இந்த நாகாஸ்திரம் தானே விட்டுவிட்டால் அனைவரும் விடுதலை பெறலாம். இந்த அஸ்திரத்தால் கட்டுண்ட யாவரும் இறக்கவில்லை என்று இராமபிரானைத் தேற்றினான், விபீடணன்.

### இராமபிரான் கலங்கிக் கூறுதல்

இலக்குவன் படுகின்ற துயரத்தைக் கண்ட இராமபிரான், ''நாகாஸ்திரத்தால் அனைவரும் அடைந்த துன்பத்தை நீக்க, இவ்வுலகைச் சாம்பலாகச் செய்துவிட ஓர் வழியே உள்ளது? யாது செய்வேன்? இந்த அஸ்திரம் இலக்குவனைக் கொன்றால் யானும் இறப்பேன்!'' என்று பலவாறு கூறி வருந்தினான்.

### கருடபகவானின் கலக்கமும் வருகையும்

போர்க்களத்தில் நடந்து கொண்டிருந்த சம்பவங்களையும், இராமபிரான் செய்வதறியாது கலங்குகின்ற

நிலையையும் வானத்திலிருந்து கண்டு கொண்டிருந்த தேவர்களின் பக்கத்தில் நின்று கொண்டிருந்தான் கருட பகவான்.

கோடி காத தூரம் தன் பார்வையைச் செலுத்தக் கூடிய கண்களை உடைய கருடபகவான், தன் கண்களி லிருந்து நீர் வழிய, இராமபிரானுக்கு ஏற்பட்ட கலக்கத்தை நீக்கவும், இந்திரசித் பிரயோகித்த நாகாஸ் திரத்தைத் தளர்ச்சியடையச் செய்யவும் எண்ணியது.

உலக இருளை நீக்கித் தன் சந்திரகாந்தி போன்ற வெண் கழுத்தால் ஒளியைக் கூட்டி, சூரியனைக் காட்டிலும் மும்மடங்கு வெளிச்சம் பரவும்படி பறந்து வந்தது கருட பகவான்.

அப்போது சூரியகாந்தி போன்று ஒளிவீசுகின்ற நெற்றிப் பட்டமும், மின்னல் போல ஒளிவீசும் ஆபரணங்களோடும், இரத்தின ஆரங்களையும், சிவந்த பொன்னரி மாலைகளையும் அசைத்துக் கொண்டு சிறகடித்துக் கொண்டு கருடபகவான் விரைந்து பூமிக்கு வந்தது.

நெடுநாட்களாகப் பிரிந்திருந்த கருடபகவான், திருமாலின் திருவடிகளைப் பலகாலம் வணங்காத நிலையை எண்ணி இப்போது இராமபிரானின் திருமேனியைத் தூரத்திலிருந்தபடியே கைகுவித்து வணங்கியது.

கருடபகவான் துதிக்க ஆரம்பித்தல்

திருமாலின் படுக்கையாகிய ஆதிசேஷன் அவதாரம் இலக்குவன் ஆவான். இலக்குவன் நிலை கண்டு வருந்து

கின்ற எம்பெருமானே! பிரம்மன் முதலியோர் தோற்றத்துக்குக் காரணமானவனே! சரணடைந்தவர் களின் துன்பத்தை நீக்கிக் காப்பவனே! நீயே இப்பொழுது மனம் தளர்ந்து வருந்துகிறாய்! எனது தலைவனே! வருந்தாதே! என்று கூறி இராமநாமத்தை துதிக்க ஆரம்பித்தான் கருடபகவான்.

**துதித்தலின் மகிமை**

இராமபிரான் கலக்கத்தைப் போக்கி, தொடர்ந்து போர் நிகழ்ச்சிகளை நடத்த இராமாயணத்தில் அதிக துணை செய்த பாத்திரம் கருடாழ்வார் ஆவான். இராம நாமத்தைத் தூரத்திலிருந்தே 11 பாடல்களில் துதித்து நாகபாசத்தைப் போக்கடிக்க தன்னலமின்றித் தொண் டாற்றிய மகத்தான பாத்திரம் கருடாழ்வார் ஆவான். கருடாழ்வார் இராமபிரானைத் துதிப்பதற்கு முன், துதித்தலின் மகிமையை நாம் அறிதல் வேண்டும்.

இறைவனைத் துதிப்போர்க்கு வல்வினை நீங்கும். துன்பம் அழிவுபடும் என்பதனைக் கந்த சஷ்டி கவசம் மூலம் அறிகிறோம். மின்னலைப் போன்றும், குங்கு மத்தைப் போன்றும் உடலுடைய அபிராமியைத் துதித்து அருள்பெற்றவர் அபிராமிபட்டர்.

கம்பராமாயணத்திலே சேது பந்தனம் அமைக்கும் போது, இராமபிரான் போட்ட பாறை பயன்பட வில்லை. ஆனால் இராமபிரான் நாமத்தைத் துதித்துப் போட்ட பாறை, பாலம் அமைக்கப் பயன்பட்டது நாமறிவோம்.

மேலும் கம்பராமாயணத்தில் சூரியனின் தேர்ச் சாரதியான அருணனுடைய மக்கள் சம்பாதி, சடாயு ஆவார்கள். சூரியனுடைய வெப்பத்தால் தாக்கப்பட்ட சம்பாதியின் சிறகுகள், யாவரும் கூடி இராமநாமத்தைத் துதித்ததினால் இறக்கை வளர்ந்தது என்பதையும் நாம் அறிவோம். பஜனைகள் துதித்தலை அடிப்படையாகக் கொண்டவை.

கருடாழ்வாரின் பாத்திரப் படைப்பு

ஸ்ரீவைணவ சமயத்தில் கருடபகவான் ஸ்ரீமந் நாரா யணனுடைய கொடியாகவும் வாகனமாகவும் தொண்டு செய்வதைக் காணுகின்றோம். திருமாலின் வாகனமாகத் திகழும் கருடபகவான் பாற்கடலைக் கடையும்போது, மந்தர மலையைக் கொண்டு வந்தவன் எனினும் மகா பாரதத்தில் கண்ணபிரான் செலுத்துகின்ற தேர்க்கொடி யாக ஆஞ்சநேயர் பயன்பட்டதையும் அறிவோம்.

கம்பராமாயணத்தின் திருமாலின் அவதாரம் இராமபிரான் ஆவார். திருமாலின் படுக்கையாகிய ஆதி சேஷன் அவதாரம் இலக்குவன் ஆவான். எனினும் திரு மாலின் கொடியாகிய கருடபகவான் இராமாயணத்தில் இராமர் இலக்குவனைப்போல் அவதாரம் எடுக்க வில்லை. எனினும் தானாக வந்து இராமபிரான் கலக் கத்தைப் போக்குகிறான். இலக்குவன், வானர வீரர் களை இறப்பிலிருந்து காப்பாற்றுகிறான். பிரதிபலன் எதையும் ஏற்காது செல்லும் ஒப்பற்ற படைப்பாக கருடபகவான் திகழ்கிறான்.

கருடபகவான் இராமபிரானை 11 பாடல்களில் ஐந்து வகை நிலையையும் கூறித் துதித்தார்.

ஸ்ரீமந் நாராயணன் ஐந்து வகை வடிவமாக விளங்கு கிறார் அவை:

1. பரத்வம், 2. வியூகம், 3. விபவம், 4. அந்தர்யா மித்வம், 5. அர்ச்சை ஆகும்.

பரத்வம் என்பதற்குப் பரவலாக விஷ்வக் சேனர், ஆதிசேஷர் முதலிய படைகளுடன் ஸ்ரீதேவி, பூதேவி, நீளாதேவிகளுடன் திருமால் பரமபதத்தில் எழுந்து அருளியிருக்கும் காட்சியாகும்.

வியூகமாவது திருப்பாற்கடலில் வாசுதேவன், சங்கர்ஷனன், பிரத்யும்னன், அனிருத்தன் என்றும் பிரிந்து நிற்றலைக் கூறுவதாகும்.

விபவமாவது ஸ்ரீராமகிருஷ்ண அவதாரம், திருமால் எடுக்கும் தசாவதாரமும் ஆகும்.

அந்தர்யாமித்துவம் மறைந்து நிற்றல். உயிர்கள் மற்றும் எல்லாப் பொருள்களிலும் பற்றியிருப்பதாகும்.

அர்ச்சையாவது திருமால் ஆலயங்களில் நின்றும், இருந்தும், கிடந்தும் எழுந்தருளிக் காட்சி தருவதாகும்.

மேற்கண்ட ஐந்து வகைகளில் திருமாலின் மகத்து வத்தைக் கருடபகவான் துதிக்கக் காணுகின்றோம்.

### கருட பகவான் துதித்தல்

கருடபகவான் தூரத்தில் இருந்தபடியே இராம பிரானையும், இராமநாமத்தையும் 11 பாடல்களில் துதிக்கிறார்.

ஒவ்வொரு பாடலின் இறுதியிலும் ''ஆர் இவ் அதிரேக மாயை அறிவார்'' என்று திருமால் புரியும்

மாயையை எவரும் அறிய முடியாத நிலையைக் கூறி துதிக்கிறான்.

### உயிர்களுக்கு வீடுபேறு நல்குவோய்! வருந்தாதே!

*தேவாதி தேவர் பலராலும் முந்து*
*திருநாமம் ஓது செயவோய்!*
*மூவாது எந்நாளும் உலகேழொடு ஏழும்*
*அரசாளும் மேன்மை முதல்வா!*
*மேவாத இன்பம் அவை மேவி மேவ*
*நெடுவீடு காட்ட முடியாய்!*
*ஆவாய் வருந்தி அழிவாய் கொல் ஆர் இவ்*
*அதிரேக மாயை அறிவார்.*

**பொருள்**

தேவாதி தேவர்களால் உம்முடைய திருநாமங் களைச் சொல்லித் துதிக்கப் பெறுபவரே! பதினான்கு உலகையும் பாதுகாக்கின்ற மேன்மை உடைய தலை வனே! அடைய முடியாத இன்பத்தோடு வாழ்ந்து பின் பரம பதத்தில் உம்மையடைந்து வீடு பேறடைய உதவு பவனே! நீ இதற்கு மனம் வருந்தலாமா? உனது மாயையை அறியவல்லார் யாவர்? எவருமில்லை.

### வியாபித்து நின்று வரங்களைத் தருவோய்! வருந்தாதே!

*எழுவாய் எவர்க்கும் முதலாகி ஈறோடு*
*இடையாகி எங்கும் உளையாய்!*
*வழுவாத வர்க்கும் வரம் ஈய வல்லை*
*அவரால் வரங்கள் பெறுவாய்!*

உயிர்களைத் தோற்றுவிக்கவும், காக்கப்படுவதற்கும் அழிக்கப்படுவதற்கும், காரணமாய் இருப்பவரே! எல்லா விடத்திலும் வியாபித்து நின்று உபாசகர்கட்கு வரங் களைக் கொடுக்கும் வல்லமை உடையவரே! ஆச்சரிய சக்தியை உடையவரே! வருந்தாதீர்! உன் மாயையை அறியவல்லார் யார்?

**யாவராலும் உன் உயர்வுக்கு விளக்கம் தரமுடியாத பெருமானே! வருந்தாதே!**

*''உன்ஒக்க வைத்த இருவர்க்கும் ஒத்தி!*
*ஒருவர்க்கும் உண்மை உரையாய்!*
*முன்ஒக்க நிற்றி உலகுஒக்க ஒத்தி*
*முடிவுஒக்கின் ஒன்றும் முடியாய்!*
*என்ஒக்கும் இன்ன செயலோ இது என்னில்*
*இருளொக்கும் என்று விடியாய்*
*அந்நொப்ப மேகொல் பிறிதேகொல் ஆல்இவ்*
*அதிரேக மாயை அறிவார்''*

**பொருள்**

உயர்ந்தோனே! நீ காத்தல் தொழில் புரிகிறாய்! படைத்தல், அழித்தலாகிய மற்ற இரு தொழில்களைப் புரியும் மூர்த்திகளுடனும் நீ பொருந்தி இருக்கின்றாய்! ஒருவருக்கும் உனது உண்மை நிலையை தெரிவிக்காது இருக்கிறாய்! முதல் முத்தி படைக்கும்போது உலகத்துப் பொருள்களுடன் நீ அந்தர்யாமியாய் கலந்து நிற்கின் றாய்! இப்பிரபஞ்சம் அழிக்கப்படும் போதும் நீ ஒன்றி நினைந்துள்ளாய்! நீயும், பிரம்மாவும், உருத்திரனும், அதிஷ்டான தேவரெனப் போற்றப்படுகிறீர்கள்!

எள்ளினுள் எண்ணெய்போல எல்லாப் பொருள் களிலும் மறைந்து பரந்து நிற்கும் உன்னிலையை எங்களால் ஆராய்ந்து பார்க்க இயலவில்லை! வருந் தாதே! உனது மிக்க மாயையை யார் அறிவார்?

**அவரவர் வினைக்குத் தக்க பயனளிக்கும் பெருமானே! வருந்தாதே!**

"ஒற்றை விடையனும் நான்முகனும் அறியாப் பெருமை உடையவன் கண்ணபிரானே!" என்றார் பெரியாழ்வார். "முதலாவார் மூவரே, அம்மூவருள்ளும் முதலாவன் முரிநீர் வண்ணன்" என்றார் பொய்கை யாழ்வார். பெருமானே! நீ அவரவர் வினைக்குத் தக்க பயனளிக்கிறாய்! வேதங்களால் துதிக்கப்படுகிறாய்! உண்ணும் சோறு, பருகும் நீர், தின்னும் வெற்றிலையும் எல்லாம் கண்ணன் என்றபடி நுகர்வதற்கு உரிய பொருளாகவும் இருக்கிறாய். ஆண் பெண் அலியாகவும் இருக்கிறாய்! இப்படிப்பட்ட உன் மாயையை அறிவார் யாரோ! வருந்ாதே!

**அடியவர்க்கு எளியவனே! வருந்தாதே!**

வேதங்கள் உன்னை உண்மைப் பொருளாக எடுத்துக் கூறுகின்றன. ஆனால் சிலர் உன்னை இல்லை என்பர்; அன்னம் எனவும், பிராணன் எனவும், மனஸ் எனவும், விஞ்ஞானம் எனவும், ஆனந்தம் எனவும் பல படியாக வேதங்கள் உன்னைக் கூறுகின்றன.

*ஆளாயம் வாழ்தி! அரசாள்தி! ஆர் இவ்*
*அதிரேக மாயை அறிவார்!"*

நீ அடியவர்களுக்கு ஏவலர் போன்று எளியவனா யும் வாழ்கிறாய்! அடியவரே அரசாளவும் செய்கிறாய் வருந்தாதே! உன் மாயையை அறிவார் யாரோ?

**அரக்கரைக் கொல்பவனே! உனக்கேன் இந்த மாயம்?**

*"சொல்லொன்று உரைத்தி! பொருள் ஆதி தூய*
*மறையும் துறந்து திரிவாய்!*
*வில்ஒன்று எடுத்தி சரம் ஒன்று எடுத்தி*
*மிளிர்சங்கம் அங்கை உடையாய்!"*

பெருமானே! நீ சொல்லாகவும் நிற்கிறாய்! அவற்றின் பொருளாகவும் விளங்குகிறாய்! வில்லைக் கையிலேந்தி அதற்கேற்ற அம்பையும் எடுக்கின்றாய்! அரக்கர்க்குப் பகைவனாய் நின்று கொல் என்று சொல்லுகிறாய்! அரக்கராய் நின்று கொல்லப்பட்டும் கிடக்கிறாய்! இங்ஙனம் மாறுபாடு உடையவனே!

*"அல்என்று நிற்றி! பகல் ஆதி ஆர்இவ்*
*அதிரேக மாயை அறிவார்!"*

இரவாகவும் நிற்கின்றாய்! பகலும் ஆகின்றாய். உனது மாயையை அறிபவர் யார்?

**அறத்தை நிலைநாட்ட முடியாமல் தவிப்பவனே! வருந்தாதே!**

பெருமானே! இப்பொழுது நீ உனது சொரூபத்தை மறந்தவன் போன்றும் இருக்கிறாய்! மறவாதவன் போலவும் இருக்கிறாய்! துறந்தவன் போலவும் இருக் கிறாய்! துறவாதவன் போலும் இருக்கிறாய்!

*''பிறந்தாயும் ஒத்தி! பிறவாயும் ஒத்தி*
*பிறவாமல் நல்கு பெரியோய்!*
*அறந்தான் நிறுத்தல் அரிது ஆக ஆர்இவ்*
*அதிரேக மாயை அறிவார்!''*

பெருமானே! அவரவர் செய்த வினைக்கு ஏற்ப உயிர்களை உடலெடுக்கச் செய்கிறாய். உன்னைத் தியானிப்பவர்கள் தம் விருப்பத்தை நிறைவேற்றி அவர் களை அறியாது மனத்தில் உறைந்திருக்கிறாய்.

*''முனைவர்க்கும் முத்தி அமரர்க்கும் மற்றிம்*
*முழுமூடர் என்னும் முதலோர்*
*அனைவர்க்கும் ஒத்தி அறியாமை, ஆர்இவ்*
*அதிரேக மாயை அறிவார்?''*

முதல் மூர்த்தியரான பிரம, உருத்திரர், மூடர் என்று எல்லார்க்கும் அறிய முடியாமல் இருக்கிறாய்! உன் மாயையை அறிபவர் யார்?

**துன்பப்படுவோரின் துயர் மனத்தில் கலந்த**
**பெரியோனே! வருந்தாதே!**

''எறிந்தாரும், ஏறுபடுவாரும் இன்ன
பொருள்கண்டு இரங்குபவரும்
செறிந்தாரின் உண்மை எனல் ஆய தன்மை
தெரிகின்றது உன்னது இடையே!''

பெரியவனே! ஆயுதங்களை (நாகபாசத்தை) எறிந்தவர் களும், அந்த ஆயுதங்களால் ஊறுபடுபவர்களும், (வானர வீரர்கள்), மனம் இரங்குபவர்களும் (இராம பிரான்), ஆகிய இங்கு நெருங்கி இருக்கின்றவர்களின்

மனத்தில் நீ கலந்து இருக்கின்றாய். அறிவீனர்களை விட்டுப் பிரிந்திருக்கிறாய்! பிரியாமல் அவர்களிடத்தும் இருக்கிறாய்! வருந்தாதே! உன் மாயையை அறிபவர் யார்?

**யாவராலும் விளங்கப்படாத தத்துவனே! வருந்தாதே!**

பெருமானே! நீ ஆயிரம் திருநாமங்களைப் பெற்றிருக்கிறாய்! தோன்றிய பொருள்கள் அனைத்திலும் கலந்து நிற்கின்றாய்! அழிவில்லாதவனாய் இருக்கிறாய்!

*''தீராய்! பிரிந்து திரிவாய்! திறம் தொறு*
*அவைதேறும் என்று தெளியாய்*
*கூர்ஆழி அம்கை உடையாய்! திரண்டோர்*
*உருஆதி கோடல் உரிபோல்*
*ஆராயின் ஏதும் இலையாதி ஆர்இவ்*
*அதிரேக மாயை அறிவார்''*

கருத்து

தீரமிக்கவனே! நீ விபவமாய் பல அவதாரங்கள் எடுத்துப் பிரிந்து வந்து நிற்கின்றாய்! அவை உன்னை அறியுமென்று தெளியப்படாதவனாய் உள்ளாய்! கையில் சக்கராயுதத்தை உடையவனே! விராட சொரூபமாய் திரண்டு ஓர் உருவமாகிறாய்! ஆராயுமிடத்து வெண்காந்தள் (வெங்காயம்) கிழங்கை உரித்தால் உள்ளே ஒன்றும் இல்லாதவாறு விளங்காதவனாய் இருக்கிறாய். இந்த உன் மாயையை அறிபவர் யார்?

இவ்வாறு 11 பாடல்களில் ஸ்ரீமந் நாராயணன் அவதாரமாகிய இராமபிரானின் திவ்விய சத்துவ குணங்களையும், வினைகளுக்கேற்ற அவரவர் ஏற்கும் நிலைகளில் எல்லாம் கலந்து பரிணத்துவம் செய்யும் பெருமானின் நிலைகளையும், இப்பொழுது கலங்கும் தன்மையையும், கண்டு துன்பம் நீங்கக் கருடபகவான் துதிப்பதை கேட்டோம்.

**துதித்த கருடபகவான் இராமபிரானிடம் வருதல்**

இராமபிரானின் ஒப்புயர்வற்ற கருணையைத் துதித்தபடியே, (போர்க்களத்தில் இருந்த) இராம பிரானின் இடத்திற்கு இறகுகளை விரித்துப் பறந்த படியே கருடபகவான் வந்தது. பொன்னின் சிவந்த ஒளி பரவ வருகை தந்த கருடபகவானை யார்? என்று இராமபிரான் அறியும் முன் போர்க்களத்தை சுற்றி இறகுகளை விரித்துப் பறந்து இராமபிரானிடம் கருட பகவான் வந்து சேர்ந்தது.

அப்போது நாகபாசத்திற்கு ஏற்பட்ட துயரினை கிழ்க்கண்ட இரு பாடல்களில் கம்பர் நமக்குக் காட்டு கிறார்.

*''வாசம் கலந்த மரைநாள நூலின்*
*வகை என்பது என்னை! மழைஎன்று*
*ஆசங்கை கொண்ட கொடைமீளி அண்ணல்*
*சடையன்தன் வெண்ணெய் அனுகும்*
*தேசம் கலந்த மறைவாணர் செஞ்சொல்*
*அறிவாளர் என்றிம் முதலோர்*
*பாசம் கலந்த பசிபோல் அகன்ற*
*பதகன் துரந்த உரகம்''*

பொருள்

ஈகையில் மேகம் போன்றவர் திருவெண்ணெய் நல்லூரில் வாழ்ந்த சடையப்ப வள்ளல் ஆவார். வேதங்களைக் கற்ற அந்தணர்களும், அறிவுடைய புலவர்களும், சுற்றத்தார்களும் சடையப்ப வள்ளலை அடைந்ததனால் அவர்களுடைய பசி நீங்கியது. எப்படி என்றால் கருடபகவான் சிறகை விரித்துச் சுற்றிப் பறந்து வந்த காரணத்தினால், நாகாஸ்திரத்தில் உள்ள பாம்புகள் துணிக்கப்பெற்று, வாசனைமிக்க தாமரையின் தண்டினுள் உள்ள மெல்லிய நூலின் தன்மையடைந்து அறுபட்டன.

மேற்கண்ட பாடலில் கருடாழ்வார் பறந்து வந்ததால் நாகாஸ்திரம் நீங்கியதற்கு, சடையப்ப வள்ளலை அடைந்தோர் பசி நீங்கப்பெற்ற தன்மையை உவமையாகக் கூறித் தமக்கு உதவி செய்யும் சடையப்ப வள்ளலைப் பாராட்டிக் கம்பர் நன்றி தெரிவிக்கும் கடனையும் அறிகின்றோம்.

நாகபாசத்திற்கு ஏற்பட்ட இன்னலினை அடுத்த பாடலிலும் கம்பர் எடுத்துக் கூறுகிறார்.

''பல்லா யிரத்தின் முடியாத பக்கம்
அவைவீச வந்து படர்கால்
செல்லா நிலத்தில் இருள்ஆதல் செல்ல
உடல்நின்ற வாளி சிதறுற்று
எல்லா விதத்தும் உணர்வோடு நண்ணி
இவனே பிழைக்கும் எனஓர்
வல்லான் ஒருத்தன் இடையே படுத்த
வடுவான மேனி வடுவும்''

**பொருள்**

பன்னகவைரி என்று கூறப்படும் ஆபத்சகாயன் கருடன் தனது நெடிய சிறகை விரித்துக் கொண்டு அதி வேகமாய் போர்க்களத்தில் பறந்துவர, அதன் காற்றுப் பட்ட உடன் மயக்கமுற்றிருந்த இலக்குவனையும், வானர வீரர்களையும் கட்டியிருந்த நாக பாசங்கள் பட்டுப் பட்டென்று அறுபட்டன. மூடர்களின் அகங் காரத்தால் ஏற்படும் பழி பாவங்கள் எல்லாம் மூவாசை களை நீக்கிய வல்லமையுடைய தத்துவ ஞானியால் உடன் அழியும் தன்மை போல, நாகபாசத்தால் தாக்குண்டோர் உடம்புகளில் தைத்திருந்த அம்புகள் சின்னாபின்னமாக்கப்பெற்று, உடலின் வடுக்களும் உடனே மாறிப் போயின.

நாகபாசத்தால் தாக்குண்ட தீவினைகளையுடைய அரக்கர்கள் உயிர் பெற்று எழவில்லை. அவர்கள் அழிந்தார்கள். மற்றவர்கள் உயிர் பெற்று எழுந்தனர். எப்படி என்றால் பிரளயத்திற்குப் பின் சிருஷ்டி காலத்தில் மீண்டும் உயிர்கள் படைக்கப்பட்டது போல், உலக காரியத்தில் முயன்று நின்ற வானர சேனைவெள்ளம் தெய்வ சங்கற்பத்தால் உயிர் பெற் றெழுந்து ஊக்கங்கொண்டு நின்றனர்.

**இராமபிரான் மகிழ்ச்சியடைந்து கருடனைப் போற்றுதல்**

இலக்குவன், அனுமன், அங்கதன், வானரவீரர்கள் அனைவரும் மகிழ்ந்து எழுந்து ஊக்கம் கொண்டனர். இராமபிரானும் அவர்களைக் கட்டித் தழுவி மகிழ்ந் தார்.

அப்போது பிறைச்சந்திரனைப் போன்ற நகங்கள் உடைய கருடபகவான் அங்கு வந்து இராமபிரானை வணங்கியது. இராமன் கருடனை நோக்கி,

''கண்டிலை முன்பு சொல்லக்
கேட்டிலை கடன்ஒன்று எம்பால்
கொண்டிலை கொடுப்பது அல்லால்
குறையிலை இது நின் கொள்கை
உண்டுஇலை என்ன நின்ற
உயிர்தந்து உதவியோனே
பண்டுஇலை நண்பு நாங்கள்
செய்வது என் பகர்தி என்றான்''

பொருள்

எதிர்பாராது தானே வந்து உதவி செய்து உயிர்களைக் காத்த கருட பகவானை நோக்கி, ''உயிருடன் பிழைப்பார்களோ? பிழைக்க மாட்டார்களோ? என்று சந்தேகிக்கும்படி இருந்த இலக்குவன், வானர வீரர்களின் உயிர்களைக் கொடுத்த மகோபகாரியோ! உனக்கும், எங்கட்கும், பழமையான சினேகம் இல்லை. இதுவரை எங்களை நீ பார்த்ததும் இல்லை. முன்பு எங்களைப் பற்றி பிறர் சொல்லக் கேட்டும் இருக்க மாட்டாய்! நீ எங்களுக்கு உயிரைக் கொடுத்து உதவியுள்ளாய், ஆனால் எங்களால் எந்தப் பயனையும் நீ அடையவில்லை நாங்கள் செய்யும் கைம்மாறு யாது? கூறுவாயாக.

**கைம்மாறு விரும்பாத கருடன் கூறியது**

நாங்கள் உங்கட்குச் செய்யும் கைம்மாறு யாது? என்று இராமபிரான் கூறிய அளவில் கருடபகவான் இராமபிரா்னை நோக்கி,

''பறவையின் குலங்கள் காக்கும்
பாவகன் பழைய நின்னோடு
உறவு உள தன்மை எல்லாம்
உணர்த்துவென் அரக்க னோடுஅம்
மறவினை முடித்த பின்னர்
வருவன் என்று உணர்த்திமாயப்
பிறவியின் பகைளு! நல்கு
விடையெனப் பெயர்ந்து போனான்''

''மாயத்தை உடைய பிறப்புக்குப் பகைவனே! நீ கூறிய வாறு நான் அன்னியன் அல்லன். நீ இராவணவதம் செய்த பின்பு, நான் உன்னிடம் வந்து உனக்கும், எனக்கும் உள்ள உறவை விளங்கச் சொல்வேன்! இப்போது எனக்கு விடை கொடுப்பாயாக!'' என்று பறவைகளுக்கெல்லாம் அரசனாகிய கருடபகவான் கூறி விட்டுப் பறந்து சென்றது.

**இராமபிரான் கருடபகவானின் உயர்ந்த எண்ணத்தைப் போற்றுதல்**

கருடபகவான் கூறிய ஒப்பரிய கூற்றைக் கேட்ட இராமபிரான் (கருட பகவான் பறந்து சென்ற பிறகு) பக்கத்தில் சூழ்ந்தோரை நோக்கி ''பதில் உதவியை விரும்பாத வித்தகன் கருடபகவான் ஆவான். நாக பாசத்தினால் கட்டுண்ட வீரர்களுக்கு உயிரைத் தந்த

உயர்ந்தவன் கருடபகவான். பேரருள் உடையோரது தன்மை இதுவாகும். பெருந்தன்மை உடைய நன் மக்கள் தாம் செய்த உபகாரத்திற்குப் பிரதிபலனை எதிர்பார்க்க மாட்டார்கள்.''

*''பேரியலாளர் செய்கை*
*ஊதியம் பிடித்தும் என்னால்*
*மாரியை நோக்கிக் கைம்மாறு*
*இயற்றுமோ வையம் என்றான்''*

கருடபகவான் செயல் கைம்மாறு வேண்டாத மேகத் தைப் போன்றதாகும் என்று இராமபிரான் கருட பகவானைப் பாராட்டிக் கூறினார். இராமபிரான் கூறுகின்ற கூற்றை முன்னர் வள்ளுவரும் கிழ்க்கண்ட குறளில் கூறியிருக்கக் கேட்கிறோம்.

*''கைம்மாறு வேண்டா கடப்பாடு மாரிமாட்டு*
*என் ஆற்றுங் கொல்லோ உலகு'' –குறள் 211*

முடிவுரை

மேகத்தைப் போன்ற கைம்மாறு கருதாத கருட பகவானின் உயர்ந்த உள்ளத்தை நாகபாசப் படலத்தில் கம்பர் நமக்குக் காட்டக் காணுகின்றோம். இலக்கு வனும், வானர வீரர்களும் நாகபாசத்தால் கட்டுண்டு தவிப்பதையும், அதைக் கண்டு இராமபிரான் கலங்கு வதையும் கண்டு தானாக உதவி செய்ய முன்வந்தான் கருடபகவான். இதையே வள்ளுவரும்,

*''கண்ணோட்டம் என்னும் கழிபெருங்காரிகை*
*உண்மையான் உண்டு இவ்வுலகு'' –குறள் 571*

என்ற குறளுக்கு எடுத்துக் காட்டாகத் திகழ்பவன் கருடபகவான். கருடபகவான் போன்ற கடமையாற்று பவர்களுக்குத் தான் இவ்வுலகம் உரிமை உடையதாக உள்ளது.

*''கருமம் சிதையாமல் கண்ணோட வல்லார்க்கு*
*உரிமை உடைத்திவ் வுலகு''* *–குறள் 578*

கருடபகவானின் ஒப்பரிய ஆற்றலை வெளிப் படுத்துவதற்காகத்தான் கம்பர், நாகபாசப் படலத்தைப் படைத்திருக்கிறார் என்று கூறினாலும் அது மிகப் பொருத்தமாக அமைகிறது.

கம்பர் தனது இராமகாதையை அரங்கேற்ற தில்லைவாழ் அந்தணர்களிடமும் ஒப்புதல் கேட்க வந்தார். அந்தணன் மகன் நாகத்தால் கடியுண்டு மாண்டுபோக, அவனைப் பிழைப்பிக்க, நாகபாசப் பாடல்களைப் பாடிக் கம்பர் உயிர்ப்பிக்கக் காணு கின்றோம். அதன்பின்தான் கம்பரால் ஸ்ரீரங்கத்தில் கம்பராமாயணம் அரங்கேற்றப்பட்டது.

*''செய்யாமல் செய்த உதவிக்கு வையகமும்*
*வானகமும் ஆற்றல் அரிது''* *–குறள் 101*

# 7. கம்பர் கண்ட அகத்தியர்

**இராம அவதாரத்தின் நோக்கம் :**

வடமொழி வான்மீகியும், தமிழில் கம்பரும் அமைத்த கலைக்கோயிலே இராமாயணமாகும். எனினும் பலருடைய கைவண்ணத்தாலும் இக்கோவில் ஒளிபெறக் காணுகின்றோம்.

இராமனை அவதார புருடனாகக் கம்பர் கருதுகிறார். மேகங்களும், கடலும் எவ்வாறு உலகிலே எங்கும் பரந்திருக்கின்றனவோ, அவ்வாறே பரம்பொருளின் சக்தியும் உலகெங்கும் பரந்து நிற்கிறது. இராமன் பரம் பொருளின் கூறு என்றும், மக்கள் அறிவிற்கும் வேத முடிவிற்கும் அகப்படாது அப்பாற்பட்டவர் என்றும் கம்பர் கூறுகிறார்.

வான்மீகியோ இராமனை ஒரு மனிதனாகவே எண்ணி கதையை நடத்துகிறார். இராமனும், தான் பரம்பொருள் அல்ல. ''அகந்து மானுஷம் மனனே'' (நான் மனிதன் தான்!) என்று வான்மீகி இராமன் கூறுகிறான்.

வான்மீகி கூறியபடி இராமன் சிறந்த மனிதன் என்றாலும் கம்பர் கூறியபடி இராமன் அவதாரபுருடன் என்றாலும், அவன் எவ்வாறு உயர்ந்தான் என்பதைக்

காட்டுவதே இராமாயணத்தின் மேலோங்கிய கருத் தாகும்.

**வனம் புகுந்த இராமன் எண்ணம் :**

இராமனும் சீதையும் இலக்குவனும் காட்டிற்கு வந்தபின் 14 ஆண்டுகளையும் காட்டிலேயே அமைதி யாகக் கழித்துவிட்டுப் பின் அயோத்திக்கு மீண்டும் செல்ல வேண்டும் என்றே சீதை விரும்பினாள்.

ஆனால் கானகம் வந்தபின், அங்கு வாழும் முனிவர் களின் துன்பம் நீக்க, அரக்கர் குலத்தை அழிக்க வேண்டு மென்பதே இராமனின் குறிக்கோளாக இருந்தது. இதனை ஆரணிய காண்டத்தில் கம்பர் தெளிவாகக் காட்டுகிறார். அதுவும் அகத்தியப் படலத்தில் தெள்ளத் தெளிய நாம் அறிகிறோம்.

**அகத்தியரின் பெருமை :**

தமிழ் கூறும் நல்லுலகம் பெரிதும் போற்றும் செந்தமிழ் முனிவர் அகத்தியர் ஆவார். அவர் சப்த முனிவர்களில் சிறந்தவராகக் கருதப்படுகிறார். கும்ப முனிவர், குறுமுனிவர் என்ற பெயர்களும் அவருக் குரியன. தமிழ் முனிவர் என்று போற்றப்படுபவரும் ஆவார், அவர் வாழ்ந்த இடம் சந்தனகுன்று என்று போற்றப்படும் பொதியை மலையாகும். அகத்தியர் பேரகத்தியம் என்ற இலக்கண நூலை இயற்றியவர்.

அகத்தியர், உருவில் சிறியவர் எனினும் உள்ளூர மிகப்பலம் படைத்தவர், ஆயிரம் பொதி பஞ்சின் நிறைவும் ஒரு சிறு தங்கக் கட்டியும் சமமாவது போல

உலகமெங்கும் நிறைந்த உறுபொருளைத் தன் உள்ளத்தில் கொண்டவர், அகத்தியர் ஆவார்.

**மதுரைக் காஞ்சியில் அகத்தியர் பெருமை :**

மதுரைக் காஞ்சியில் அகத்தியர் இராவணனை வென்ற கதை கூறப்பட்டுள்ளது.

இராவணன் தன் மிக்க ஆற்றலை எங்கும் காட்டி வரும் நாளில், அகத்தியரையும் போட்டிக்கு அழைத்தான். அகத்தியர் அவனுடன் இசைப் போருக்கு வருவதாகச் சவால் விட்டார். இசைப் போரில் தான் தோற்றால், தானும் தன் இனத்தாரும் தமிழ் நாட்டிற்குள் கால் எடுத்து வைப்பதில்லை என்று இராவணன், அகத்தியரிடம் சூளுரைத்தான்.

இசைப் போட்டி தொடங்கியது. அகத்தியர் இசையுடன் பாடினார். அப்போது ஒரு பாறையின் மீது இராவணனுடைய யாழ் இருந்தது. அகத்தியர் பாடிய நிலையில் அப்பாறை உருகியது. உருகிய பாறைக் குழம்பில் இராவணன் யாழ் மூழ்கியது. அகத்தியர் மற்றொரு இசையில் பாடல் பாட, உருகிய பாறை மட்டும் கெட்டியாகி முன்பு இருந்த பாறை போலானது. எனினும் இராவணனுடைய யாழ், கல்லில் சிக்கி, எடுக்க முடியாத நிலையில் அகப்பட்டுக் கொண்டது. இராவணன் தமிழ்நாட்டிற்கு வருவதில்லை என்று கூறி இராவணன் அகத்தியரிடம் நடத்திய இசைப் போட்டியில் தோற்றுவிட்ட செய்தியை அறிகிறோம்.

அகத்தியருக்கும் அரக்கர்களுக்கும் பகை என்பதை அறிந்த இராமபிரான் அகத்தியரிடத்தில் ஆசி பெற்றுச் செல்ல வேண்டுமென்று எண்ணிய அவருடைய ஆசிரமத்திற்குச் செல்லுகின்ற நிலை ஏற்பட்டது.

**கம்பரின் அகத்தியப் படலம் :**

அகத்தியப் படலத்தில், அகத்தியரின் மேலான பெருமையினைக் கூற வந்த கம்பர், "எப்படி ஒரு பெரிய ஆலமரம் அதனின் சிறிய விதைக்குள் அடங்கியிருக் கிறதோ அதுபோல வல்லமை உடைய அகத்தியர் வெளிப்பட சிறிய உருவம் உடையவராகக் காணப் படுகிறார்" என்று கூறுகிறார்.

இதனைக் கம்பர். "ஆய அவன் ஆல்அமரும் மெய்உடையன்" என்று குறிப்பிடுகிறார். கம்பராமாயணத்தில் ஆரண்ய காண்டத்தில் மூன்றாவது படலமாக ஒளிர்வது அகத்தியப் படலமாகும். அகத்தியப் படலம் 59 பாடல் களைக் கொண்டது.

**இராமபிரான் அகத்தியர் ஆசிரமம் அடைதல் :**

இராமன், சீதை, இலக்குவன் மூவரும் சரபங்க முனிவருடைய ஆசிரமத்தை விட்டுப் புறப்பட்டு இனிய சோலைகளை உடைய தண்டக வனத்தை வந்தடைந்தனர். அங்கு வாழும் முனிவர்கள் வால கில்ய முனிவர்கள் என்று அழைக்கப்பட்டனர். அவர்கள் மழித்த தலையை உடையவர்கள். மௌன விரதம் அனுஷ்டிப்பவர்கள். அவர்கள் அழைப்பை ஏற்று மூவரும் இங்கு பர்ண சாலை அமைத்துத் தங்கியிருந்தனர்.

இராமபிரான் சீதையுடனும் இலக்குவனுடனும் பத்து ஆண்டுகள் தண்டக வனத்தில் பர்ணசாலை அமைத்து, தங்கி, அரக்கர்களால் முனிவர்களுக்கு எவ்வித இடையூறுமின்றிக் காத்து வந்தான். பின் சுதீக்கணன் என்னும் முனிவரின் ஆசிரமத்தை மூவரும் அடைந்தனர்.

அப்போது இராமபிரான் சுதீக்கணன் முனிவரிடம், ''சுவாமி நாங்கள் அகத்திய முனிவரைக் காண வேண்டும்'' என்று கூற, அம்முனிவர் அகத்தியர் வாழும் ஆசிரமத்தை அடையும் வழியைக் கூறினார்.

மாட்சிமை பொருந்திய எழில் இராமன் சீதையுடனும், இலக்குவனுடனும் அகத்திய ஆசிரமத்தை நோக்கி வந்தான்.

*''மாண்ட வரதன் சரண் வணங்க, எதிர்வந்தான்*
*நீண்ட தமிழால் உலகை நேமியின் அளந்தான்''*

என்று கம்பர் குறிப்பிடுகிறார். ''அகத்திய முனிவர் நீண்ட தமிழால் உலகை கடலால் அளந்தான்'' என்று கம்பர் குறிப்பிடுகிறார். உயர்ந்து நெடுங்காலம் வாழும் தமிழைக் க்ற்றவர் அகத்தியர். அவர் கடலையும் உண்டவர். அவரை மூவரும் கீழே விழுந்து வணங்கினார்கள்.

**கடல் நீரை உண்டு உமிழ்ந்த அகத்தியர் :**

நேமியாகிய கடலை அகத்தியர் குடித்த வரலாற்றைப் பலநூல்களும் சுவை படக்கூற அறிகிறோம். திருவிளை யாடற்புராணத்தில் இந்திரன் பழிதீர்த்த படலத்தில் அகத்திய முனிவரின் அளப்பரிய ஆற்றலைப் பரஞ் சோதியார்.

''கைத்தவன் கரத்து வைகும் கடலை வெற்படக்குங் கையில்
பெய்துமுந் தெல்லைத் தாக்கிப் பருகினான்''.

என்று குறிப்பிடுகிறார். அகத்தியர் சிவபெருமானுக்கு ஒப்பானவர், இந்திரனுக்கும் தேவர்களுக்கும் துன்பம் செய்த வஞ்சகனாகிய விருந்திரா சூரன், கடலினுள் சென்று மறைந்த போது, அகத்திய முனிவர் கடல்நீர் முழுவதையும், உளுந்தளவாகக் குறுக்கி, அடக்கிய கையால் எடுத்துக் குடித்தார். இதனை மேலும் சுவைப்படக் கூற வந்த கம்பர் அகத்தியப் படலத்தில்,

''எண்தவ! எமக்கு அருள்க'', எனக் குறையிரப்பக்
கண்டு, ஒரு கை வாரினன், முகந்து கடல் எல்லாம்
உண்டு, அவர்கள் பின், ''உமிழ்க''என்றலும் உமிழ்ந்தான்''!

என்று கூறுகிறார்.

பொதிகை மலையில் சென்று அகத்தியரைக் கண்ட தேவர்கள், ''தவத்தில் சிறந்தவரே! எமக்கு அருள்க!'' என்று குறைகளை நீக்கும்படி கேட்க, அதைக் கேட்ட அகத்தியர், கடலைக் கண்டார். ஒரு கையால் கடல்நீர் முழுவதையும் அள்ளிக் குடித்தார். கடலினுள் இருந்த விருத்திராசூரனை இந்திரன் வச்சிராயுதத்தால் வெட்டி வீழ்த்தினான். மீண்டும் தேவர்கள் அகத்தியரிடம் வாயினுங் குடித்த நீரை உமிழ்க என்று கூறியதும், அகத்தியர் நீரை உமிழ்ந்தார். அதோடு மட்டுமல்ல அகத்தியர் கைப்பட்ட கடலானது தூய்மை பெற்றது என்பதைக் கம்பர்,

*"தூய கடல்நீர் அடிசில் உண்டு அது துரந்தான்"*

என்று குறிப்பிடுகிறார்.

**வில்வலன் – வாதாவி அழிந்த வரலாறு :**

கந்தபுராணத்தில் "வில்வலன் வாதாவிப் படலத்தில்" முனிவர்களுக்குத் துன்பம் செய்த, வில்வலன் வாதாவி என்ற அரக்கர்களை, அகத்திய முனிவர் எவ்வாறு அழித்தார் என்ற செய்தியை அறிகின்றோம். முதலில் அகத்தியர் " வாதாவி சீரணமாவாய்" என்று கூறி வாதாவியைத் தன் வயிற்றினுள் ஜீரணமடையச் செய்கிறார், பின் தருப்பைப் புல்லால் வில்வலனை இறக்கச் செய்கிறார். கந்தபுராணத்தில் வருகின்ற செய்தியைக் கம்பர் அகத்தியப் படலத்தில், சுருக்கமாக

*"மாயவினை வால் அவுணன் வாதவிதன் வன்மைக்*
*காயம் இனிது உண்டு, உலகில் ஆர்இடர்*
*களைந்தான்"*

என்று குறிப்பிடுகிறார்.

**விந்திய மலையை அடக்கிய அகத்தியர் :**

விந்தியமலையின் செருக்கை அகத்தியர் அடக்கிய வரலாற்றைக் கந்தபுராணத்தில் காணுகின்றோம்.

கதிரவனும், சந்திரனும் செல்லமுடியாதபடி ஆகாய வழியை மறைத்து நின்றது விந்திய மலை. இதனால் யோக நெறியில் வாழும் முனிவர்கள் காலமும், கணக்கும் அறியாமல் மயங்கினர். அப்போது அங்கு வந்த அகத்தியர் "விந்தமலையே" யாம் பொதியாசனம் செல்லுகின்றோம்! வழி விடுக" என்று கேட்டார்.

உடனே விந்திய மலை செருக்குற்று, "முனிவனே! நீ வந்த வழியே திரும்பிப் போ" என்று இறுமாப்புடன் கூறியது,

அப்போது அகத்திய முனிவர் சிவபெருமானை எண்ணினார், தமது வலக்கரத்தை நீட்டினார். குறுகிய தோற்றமுடைய அவரது கரம் மேலும் மேலும் நீண்டது. விந்தியமலையின் தலையில் ஆசி கூறுவது போல் கையை வைத்தார் அகத்தியர். தருக்குற்ற அம்மலை பூதலத்தைத் தாங்கும் ஆதிசேடனாகிய நாகத்தின் தலையில் சேர்ந்தது. கந்தபுராணத்தில் கச்சியப்பர் கூறும் செய்தியைக் கம்பர் அகத்திய படலத்தில்,

*யோகமுறு பேர் உயிர்கள்தாம், "உலைவுறாமல்*
*ஏகு நெறியாது" என, மிதித்து அடியின் ஏறி*
*மேகநெடு மாலை தவழ் விந்தம் எனும் விந்தோய்*
*நாகம் அது நாகம் உற, நாகம் என நின்றான்"*

என்று குறிப்பிடுகிறார். அகத்தியரின் திருவடி சிறப்பால் விந்தியமலை அடங்கியது என்று கூறுகிறார்.

யோக நெறியில் வாழும் முனிவர்களின் மயக்க நிலையைச் சரிப்படுத்த, அகத்தியர் தம் திருவடியால் விந்தியத்தை மிதித்துச் சரிப்படுத்தினார் என்று அழகாகக் குறிப்பிடுவதைக் காணுகின்றோம். இங்கு விந்திய மலையாகிய நாகம், ஆதிசேடனாகிய நாகத்தின் முடியில் படியும்படியாக, நாகமாகிய அகத்தியர் யானை போல் நின்றார் என்று அகத்தியரின் வல்லமையை "நாகம் அது, நாகம் உற, நாகம் என நின்றான்" என்று கம்பர் கூறுவது நிகரிலாச் சிறப்புடையதாகும்.

**உலகத்தைச் சமன் செய்த அகத்தியர் :**

அகத்திய முனிவர் வடதிசையிலிருந்து தென் திசைக்குச் சென்ற நிலையைக் கந்தபுராணத்திலும், திருமந்திரத்திலும், திருவிளையாடற்புராணத்திலும் விவரித்துக் கூற அறிகிறோம். பார்வதி – பரமேசுவரன் திருமண வைபவத்தின் போது திருமணத்தைக் காண தேவர்கள், திருமால், பிரம்மன் முனிவர்கள் அனைவரும் ஒருங்குகூடிய காரணத்தால் பூதியின் வடகோடு தாழ்ந்து, தென்கோடு உயர்ந்தது. இமயமலை வருந்தி நடுங்கியது. அதைக் கண்டு அஞ்சிய தேவர்கள், முனிவர்கள் சிவபெருமானிடம் பிரார்த்தித்தனர். சிவபெருமான் அகத்தியரை வரவழைத்தார். அகத்தியர் அகவொளியை வளர்த்தவர். சிவபெருமான் அகத்தியரை நோக்கிக் கூறியதைத் திருமூலர்,

*''நடுவு நில்லாது இவ்வுலகம் சரிந்து*
*கெடுகின்றது எம்பெருமான் என்னை ஈசன்*
*நடுவுள அங்கி அகத்திய நீபோய்*
*முடுக்கிய வையத்து முன்னிர் என்றானே''*

என்று அகத்தியரால் உலகு நேராய் நின்றது என்று குறிப்பிடுகிறார். அகத்தியரைச் சிவபெருமான் ஏன் தென்திசைக்கு அனுப்பினார் என்பதற்கு மற்றொரு காரணமும் உண்டு என்று மதுரைக் காஞ்சி குறிப்பிடுகிறது. வடதிசையில் தமிழ்மொழி மணிப்பிரவாள நடையில் மக்களால் பேசப்பட்டது. தமிழ்க் கல்வியில் வடதிசை தாழ்ந்தும் தென்திசை உயர்ந்தும் இருப்பதைக் கண்டார். அதற்காகச் சிவபெருமான் செய்த திருவிளை

யாடலால் வடதிசை தாழ்ந்தது. அகத்திய முனிவர் தென்னாட்டிற்குச் சென்று தூய தமிழை மேலும் கற்று, வடதிசைக்குத் தூய தமிழைக் கொண்டு வர வேண்டு மென்ற சிவபெருமான் திட்டப்படி, அகத்தியரைப் பொதிய மலைக்கு அனுப்பினார். அதுதான் உண்மையான நிலை என்று சுட்டபபடுகிறது.

உலகை சீர்செய்த வரலாற்றைக் கம்பர் அகத்தியப் படலத்தில்,

''மூசு அரவு சூடுமுதலோன் உரையின், ''மூவா
மாசு இல் தவஏழு'' என வடாது திசை மேல்நாள்
நீசம் உற, வானின் நெடுமா மலயம் நேரா,
ஈசன் நிகர் ஆய், உலகுசீர் பெற இருந்தான்''

என்று குறிப்பிடுகிறார்.

கருத்து :

அஞ்சத்தகக்க பாம்புகளை உடலெங்கும் அணிந்த சிவபெருமான், மூவரின் ஆற்றலைக் கொண்டவரும், தோற்றத்திலே யாவருடைய குற்றங்களையும் அகற்று பவரும் குற்றமற்ற தவத்தின் வடிவம் ஆக விளங்கு பவருமாகிய அகத்தியரை நோக்கி, ''உலகத்தைச் சமன் செய்ய நீ! தென் பொதியை அடைவாயாக!'' என்று கூறினார். சிவபெருமான் ஆணையிட்டபடி அகத்தியர் தென்பொதியைச் சேர்ந்தார். உலகு சீர்பெற்றது.

இப்பாடலில் அகத்தியரைக் கம்பர், ''ஈசன் நிகர் ஆய்'' என்று உயர்த்திக் கூறுவதை அறிகின்றோம்.

**அகத்தியர் வசிப்பிடம் பொதிகை மலை :**

அகத்தியர் வருகையினால் பொதியை, அளக்கலாகா தவத்தின் அளவாலும், செம்பொருள் வளத்தாலும் உயர்ந்தது என்று கம்பர் குறிப்பிடக் காணுகின்றோம்.

அகத்திய முனிவரின் வசிப்பிடம் பொதியை ஆகும். இதனைப் புலவர் புராணத்தில் முருகதாச அடிகள்,

''புலைவெறுத்துச் சாபம் இட்ட புகழ்முனிவன்
வசிப்பிடமாம் பொதியை என்னும்
மலையழகு மிகப் பொலிதல் உணர்ந்தன்றோ
மலயம் என வகுக்கின்றாரே''

என்று குறிப்பிடக் காணுகின்றோம். மாமலயம் என்னும் பொதிய மலை, அகத்தியர் தங்கி வசித்ததால் மாண்பு பெற்றதாகும்.

**தமிழின் பெருமை :**

நாடக வழக்கிலும், உலகியல் வழக்கினும் பாடல் சான்ற புலனெறி வழக்கிலும் உயர்ந்தது தமிழாகும். வடமொழியிலுள்ள வேதங்களைவிட உயர்ந்தது தமிழாகும். வடமொழி மறைகளை நாம் எளிதில் உணர முடியாது. எனவேதான் வடமொழி வேதங்களைக் குறிப்பிடும் போது வழக்கு மறை நான்கு எனக் கம்பர் குறிப்பிடுகிறார்.

வடமொழி வேதத்துடன் தமிழ் மொழியை ஒப்பீடு செய்து அகத்தியப் படலத்தில் கம்பர்

''உழக்கும் மறைநாலினும் உயர்ந்து உலகம் ஓதும்
வழக்கினும் மதிக் கவியினும் மரபின் நாடி

*நிழல்பொலி கணிச்சி மணிநெற்றி உமிழி செங்கண்*
*தழல்புரை சுடர்க் கடவுள் தந்த தமிழ் தந்தான்''*

நமக்கு எளிதில் உணர முடியாதபடி உழட்டுபவை வடமொழியிலுள்ள நான்கு வேதங்களாகும். தமிழ் மொழி உலகோர் எளிதில் ஓதக் கூடியது. செஞ்சொற் கவியின்பலம் நல்கக்கூடியது, அறம், பொருள், இன்பம், வீடு என்னும் முறைகளை உடையது. அகம், புறம் என்னும் மரபுகளை உடையது. எளிதில் நாடி ஆய்வதற்கு உரியது. எனவே வடமொழி நான்கினும் உயர்ந்தது தமிழே ஆகும்.

**தமிழை வளர்த்தவர் அகத்தியர் :**

நெற்றிக் கண்ணை உடைய செந்தீ வண்ணன் சிவபெருமானால் நல்கப்பட்டதுதான் தமிழாகும். அந்தத் தமிழை வளர்த்தவர் அகத்திய முனிவர் ஆவர். நெற்றிக் கண்களால் முருகப் பெருமானைப் படைத்தவர் சிவபெருமான். அந்தச் சிவபெருமானால் நல்கப் பெற்றதுதான் தமிழாகும்.

நெருப்பு தன்பால் சேர்ந்தவற்றைத் தம்போல் ஒளியுடையதாக்கும். மாசுகளை நீக்கி நீறாக்கும். அத்தகைய செம்பொருளாகிய சிவபெருமான் தந்தது தான் தமிழாகும், இதனைக் கம்பர் மேற்கண்ட படலத்திலுள்ள பாடல்களால் விளக்கக் காணுகின்றோம்.

**நகுடனை மலைப் பாம்பாக்கியவர் அகத்தியர் :**

நகுடன் என்பான் நூறு அசுவமேதயாகம் செய்து இந்திர பதவி பெற்றான். அவன் இத்திராணியை விரும்பி

பல்லக்கில் ஏறி, ஏழு முனிவர்களைச் சுமக்கச் செய்தான். இந்திராணியிடம் விரைவில் செல்லும் பொருட்டு, ஏழு முனிவர்களின் முதுகில் சாட்டையால் அடித்து, சர்ப்ப! சர்ப்ப! என்று கூறினான். ஏழு முனிவர்களில் ஒருவரான அகத்தியர் சாட்டையடி தாங்காது, நகுடனை நோக்கி, ''நீ சர்ப்பமாக ஆவாய்'' என்று சினந்து கூற, அகத்திய முனிவரின் சாபத்தால் நகுடன் மலைப் பாம்பாகிக் கீழே விழுந்தான். இதனை வியாச பாரதத்திலும் பரஞ்சோதி முனிவர் இயற்றிய திருவிளையாடற் புராணத்திலும் காணுகின்றோம். அதோடு மட்டுமல்ல அகத்தியருடைய சாபத்தினால் தன்னைத் தொடர்ந்து வந்த சிறிய நாயினை இந்திரனாக மாற்றவும் செய்தார். இதனை புலவர் புராணத்தில் முருக தாச அடிகள்,

*மந்திர வேள்வி நூறு வாம்பரித் துணை கொண்டாற்றி*
*இந்திரன் ஆனாற் பாம்பாகிடச் செய்தோர் இளநாய் தன்னைத்*
*தந்திரம் யானும் இன்றித் தவள வாரணத்துய்த்தான்''*

என்று அகத்திய முனிவரின் பெருமையைக் கூறி, சந்திரனைச் சூடிய சிவபெருமானுக்கு நிகரானவர் அகத்தியர் என்பதையும் முருகதாச அடிகள் கூறக் காணுகின்றோம்.

பகைவரை அழித்து நண்பர்களாகிய தேவர்களைக் காத்தவர் அகத்தியர். அதற்கு அவர் செய்த தவமே காரணமாகும். வள்ளுவரும்

*''ஒன்னார்த் தெறலும் உவந்தாரை ஆக்கலும்*
*எண்ணின் தவத்தான் வரும்''*

என்று குறிப்பிடுவது அகத்தியருடைய பெருமைக்கும் சான்றாகும்.

அகத்தியரும், காவிரியும் :

கந்தபுராணத்தில் அகத்தியப் படலத்திலும், காவிரி நீங்கு படலத்திலும் காவிரி நதி எவ்வாறு கொங்கு நாட்டில் தோன்றியது என்ற வரலாறு கூறப்பட்டுள்ளது. கயிலாயத்தில் சிவபெருமான் அகத்தியருக்குக் காவிரியின் தீர்த்தத்தைக் கமண்டலத்தில் கொண்டு போகும்படி பணித்தார்.

அகத்தியர் கொங்குநாட்டில் சிவபூஜை செய்து கொண்டிருந்தார். விநாயகப் பெருமான் காகமாக உருவெடுத்து அகத்தியரின் கமண்டலத்தின் மீது வந்து அமர்ந்தார். அகத்தியர் காகத்தை வெருட்டினார். உடனே காகம் அகத்தியரின் கமண்டலத்தைக் கவிழ்த்துவிட, அதிலிருந்த காவிரி நீர் கொங்கு நாட்டில் பாய்ந்து ஓடியது.

அகத்தியர் கயிலாத்திலிருந்து கொண்டு வந்த நீரை, உலக உயிர்கள் தழைக்கக் காவிரி பாய்ந்த வரலாற்றைக் கம்பர் அகத்தியப் படலத்தில் சுருக்கமாக

''எண்திசையும், ஏழ் உலகும் எவ்வுயிரும் உய்ய,
குண்டி கையினில், பொருனில், காவிரி
கொணர்ந்தான்''

என்று கம்பர் குறிப்பிடுவதை அறிகின்றோம்.

**சிவபெருமானும், அகத்தியரும் :**

தமிழ்மொழியும் வடமொழியும் இறைவன் முழக்கிய உடுக்கையின் இருபுறம் இருந்து தோன்றின. வடமொழியைப் பாணினி முனிவர்க்கும் தென்மொழியை அகத்தியர்க்கும் சிவபெருமான் உடுக்கையின் இருபுறமிருந்தும் தந்தார் என்றும் குறிப்பிடப்படுகிறது. புலவர் புராணத்தில் முருகதாச அடிகள்

*''முந்துநாள் அரன் நடம்செய்வான் உடுக்கையை முழக்க*
*நந்து பேரொலித் துணைகொடு முகத்தெதிர் நண்ணும்*
*சிந்து பாணன் வண்தமிழ் இலக்கணம் மிகச் செப்பித்*
*தந்து, லோகம் முற்றுய்வுறச் செய்தனன் அம்மா''*

என்று குறிப்பிடுகிறார். அதாவது ஆடலில் வல்ல சிவபெருமான் உடுக்கை என்னும் இசைக் கருவியை முழக்கினார். அதனால் அப்போது அவர் முன்னால் எதிர் வந்து நின்றார் அகத்தியர். அவருக்குத் தமிழ் இலக்கணத்தை ஆடல் வல்லோன் அருளினார் என்றும், அதனைப் பெற்ற அகத்தியர் தமிழ் இலக்கணத்தை உலகம் முழுவதும், பரப்பினார் என்றும் கூறியுள்ளார். இதனை அகத்தியப் படலத்தில் கம்பர்

*''என்றும் உள தென் தமிழ் இயம்பி இசை கொண்டான்''*

என்று சுருக்கமாகக் குறிப்பிடுகிறார்.

**இராமபிரானை வரவேற்ற அகத்தியர் :**

இவ்வாறு பல ஆற்றல்களையும், மகத்துவத்தையும் பெற்ற அகத்திய முனிவரின் ஆசிரமத்தை இராமன்,

சீதை, இலக்குவன் மூவரும் வந்தடைந்தனர். அப்போது இராமனின் வருகையைக் கண்ட அகத்தியர்,

"கண்டனன் இராமனை, வர கருணை கூற
புண்டரிக வாள் நயனம் நீர்பொழிய நின்றான்"

என்று கம்பர் குறிப்பிடுகிறார். இராமனைக் கண்ட அகத்தியர், அன்பு பெருக, தன்னுடைய தாமரை மலர் போலும், ஒளிமிகுந்த கண்கள் உவகைக் கண்ணீர் சொரிய இராமனைத் தழுவியபடி, உன் வரவு நல்வரவாகுக என்று உபசார மொழிகளால் வாழ்த்தினார்.

அப்போது அகத்திய முனிவருடன், இராமனை வரவேற்று சூழ்ந்து நின்ற மற்ற முனிவர்களும் தங்களுடைய கமண்டலங்களில் உள்ள நல்ல நீரை இராமர் மீது தெளித்தனர். மலர்களையும் தூவினார்கள்.

பலவாறு இராமனை உபசரித்த அகத்திய முனிவர் இராமனிடம் "தேவர் துன்பமின்றி உயர்வடைய அவர்களுக்குத் துன்பம் செய்யும் அரக்கர்களை அழிக்க நீ! இங்கேயே தங்கி இருப்பாயாக!" என்று வேண்டினார். உடனே இராமபிரான் அகத்தியரைப் பார்த்து, வேதங்களில் வல்லவரே அரக்கர்கள் செய்யும் தீமைகளை அழிக்க தென்திசையில் சற்று முன்னேறிச் சென்று தங்கலாம், என்று எண்ணியுள்ளேன்; விடை தருக என்று கூறினான்.

**இராமபிரானுக்கு அகத்தியர் அளித்தவை :**

அதைக்கேட்ட அகத்தியர் மகிழ்ந்து, முன்பு வருணனிடமிருந்து பெற்ற ஒரு வில்லை இராமனிடம்

கொடுத்து, ''இவ்வில் திருமால் வைத்திருந்த வில்லாகும், மூன்று உலகங்களும் தானும் வணங்கும்படியான சிறப்புப் பொருந்திய இவ்வில்லை, அம்புத் தொகுதிகள் குறையாமல் நிறைந்திருக்கும் புட்டிலோடு பெற்றுக் கொள்வாயாக!'' என்று கூறிக் கொடுத்தார்.

அதோடு மட்டுமல்ல, மேலும் ஒரு வாளையும், மற்றுமொரு அம்பையும் அகத்தியர் இராமனுக்குக் கொடுத்தார். அந்தவாளின் மகத்துவத்தையும், அம்பின் சிறப்பினையும் கூற வந்த கம்பர்,

''இப்புவனம் முற்றும் ஒரு தட்டினிடை இட்டார்
ஒப்பு வரவிற்று என உரைப்ப அரிய வாளும்
வெப்பு உருவு பெற்ற அரன்மேரு வரைவில்லாப்
முப்புரம் எரித்த தனிமொழிக் கணையும் நல்கா''

என்று கூறி அகத்தியர் கொடுத்தார்.

**கருத்து :**

அகத்தியர் இராமபிரானுக்கு மேலும் இரு பொருள்களை வழங்கினார்.

1. இந்த உலகம் முழுவதையும் ஒரு தராசு தட்டில் இட்டாலும், மற்றொரு தட்டில் இட்ட இந்த வாளுக்கு இணையாகாத தன்மையுடைய ஒரு வாளினையும்
2. வெம்மை மிக்க தீயைப் போன்ற திருமேனியை உடைய சிவபெருமான் மேரு மலையை வில்லாகக் கொண்டு திரிபுரங்களை எரிக்கப் பயன்படுத்திய ஒப்புயர்வற்ற அம்பையும் இராமபிரானுக்கு அகத்தியர் நல்கினார்.

மேற்கண்ட இருபாடல்கள் மூலமாக அகத்தியர் இராமபிரானுக்கு மூன்று அரிய கருவிகளைக் கொடுத்து உதவினார் என்பதை அறிகிறோம்.

இராமபிரான் அகத்தியரிடம் விடை பெறுதல் :

மூன்று கருவிகளை நல்கிய அகத்தியர் இராம பிரானிடம், " நீங்கள் காவிரி நீரின் வளப்பமுடைய குளிர்ச்சியான சோலைகளை உடைய அன்னப் பறவை களும், நாரைகளும் செறிந்து விளையாடும் பஞ்சவடியில் சென்று சிறிது காலம் தங்குவீர்களாக! அரக்கர்களை ஒழிக்க அதுதான் உகந்த இடம் என்று கூறி, செல்லும் வழியையும் உவந்து கூறி வழிப்படுத்தினார். அகத்தியரிடம் ஆசி பெற்ற இராமபிரான் சீதையோடும், தம்பி, இலக்குவனுடனும் பஞ்சவடியை நோக்கிச் சென்றான்.



## அருப்புக்கோட்டை அருட்கவிஞர் இயற்றிய நூல்கள்

இடைநிலை ஆசிரியராக 15 ஆண்டுகளும், இரண்டாம்நிலைத் தமிழாசிரியராக 7 ஆண்டுகளும், மேனிலைத் தமிழாசிரியராக 16 ஆண்டுகளும் ஆக 38 ஆண்டுகள் பணிபுரிந்து 1994 ஜூலையில் பணி ஓய்வு பெற்றவர்,

பெற்ற விருதுகள்:

1. ''கவிச்சக்கரவர்த்தி கம்பர்'' – அனைத்துலக தமிழ்மாமன்றம், சின்னாளப்பட்டி 2001 ஜூலை.
2. ஈரோடு தமிழ்ச்சங்கப் பேரவை 2002 அக்டோபரில் நல்கிய விருது ''வாரியார் விருது'' ஆகும்.
3. ''பாரதி விருது'' – மாமதுரக் கவிஞர் பேரவை மதுரை 2003 இல்.

**பெற்ற பட்டங்கள் :**

1. பேராசிரியர் தா.கு. சுப்பிரமணியம், எம்.ஏ. அவர்கள்

   1979 இல் வழங்கிய பட்டம் அருட்கவிஞர் காசி (நான்கு ஆன்மிக நூலிற்காகச் செய்த சிறப்பு)

2, அனைத்திந்திய தமிழ் எழுத்தாளர் சங்கம், சென்னை 1992 இல் எட்டயபுரத்தில் ''பாரதி பணிச் செல்வர்'' பட்டம் வழங்குதல்.

3. சென்னை இதய ரோஜா பதிப்பகத்தார் 2001இல் வழங்கிய பட்டம் ''கவிமாமணி'' என்பதாகும்.
4. தஞ்சை இதயகீதம் இயக்கம் 1996இல் ''கவியருவி'' பட்டம் வழங்கல்.
5. சென்னை கவிதை சக்தி இயக்கம் 2001இல் ''கவிச்சாரல்'' பட்டம் வழங்கல்,
6. ஈரோடு தமிழ்ச்சங்கப் பேரவை 2000இல் ''கவித்தமிழ்க் கோமகன் பட்டம் வழங்கல்.

**இயற்றிய நூல்கள்:**

1. முதல் நூல் – காமராசர் வெண்பாப்பத்து 1979
2. ஸ்ரீ அனவரத செல்வ விநாயகர் பதிகம் 1979
3. இன்சுவை விருந்து 1980
4. ஸ்ரீ பழனியாண்டவர் பாமாலை 1980
5. ஸ்ரீ வாலசுப்பிரமணியம் பதிகமும் மாலையும் 1979
6. ஸ்ரீ அமுதவல்லியம்மன் பதிகம்
7. ஸ்ரீ வரதராஜப் பெருமாள் பாமாலை
8. ஸ்ரீ பத்திரகாளியம்மன் கும்பாபிஷேக மலர்
9. விநாயகர் விடுதூது
10. ஸ்ரீ ஆஞ்சநேயரும் நவக்கிரகத் தோத்திரமும்
11. பூவெம்பாவை
12. ஸ்ரீ ஏனாதிநாத நாயனார் பதிகம்

13. கிளி விடுதூது
14. மாரியைப் பணிகுவர்
15. கவிச்சுவையமுது
16. தேன் விருந்தம்
17. ஸ்ரீ அமுதலிங்கேஸ்பரர் தல வரலாறு
18. நமக்குத் தொழில் கவிதை
புதுமலர்ப் புத்தகாலயம்
19. வள்ளலார் வாழ்வும் மும்மந்திரமும்
இதயரோஜா பதிப்பகம்
20. வள்ளுவர் வழங்கும் மருந்து
சுவாதி பதிப்பகம், சென்னை – 16
21. குறளமிழ்தத்தில் சிலதுளிகள்
மணிமேகலை பிரசுரம்
22. பெண்மையைப் போற்றுவோம்
மணிமேகலை பிரசுரம்
23. சுவாமி விவேகாநந்தரும் மும்மந்திரமும்
சித்ரா பதிப்பகம்
24. பெருந்தலைவர் காமராசரும் நடிகர் திலகம்
சிவாஜி கணேசனும் – மணிமேகலை பிரசுரம்
25. கவிச்சக்ரவர்த்தி கம்பர் கவிநயம்
மணிமேகலை பிரசுரம்
26. வால்மீகிக்கு வளம் தந்த கம்பர் – புதுமலர்ப்
புத்தகாலயம்

27. மகாகவி பாரதி அந்தாதி
இதயரோஜா பதிப்பகம்

28. கம்பர் வரலாற்றில் கவினுறு நிகழ்ச்சிகள்
வனிதா பதிப்பகம்

29. கம்பரைப் போற்றும் மகாகவி
மணிமேகலை பிரசுரம்

30. கம்பரின் கைவண்ணமும் சடகோபர் அந்தாதியும்
சுவாதிபதிப்பகம், சென்னை – 16.





# 8. கம்பர் அருளிய சடகோபர் அந்தாதி

## சிறப்புப் பாயிரம்

1. தேவில் சிறந்த திருமாற்குத் தக்கதெய்வக் கவிஞன்
பாவில் சிறந்த திருவாய் மொழிபகர் பண்டிதனே
நாவில் சிறந்தமாறற்குத் தக்கநன் நாவலவன்
பூவில் சிறந்த ஆழ்வான் கம்பநாட்டுப் புலமையனே.

2. ஆரணத்தின் சிரமீது உறை சோதியை அந்தமிழால்
பாரணம் செய்தவனைக் குருகூரனைப் பற்பலவா
நாரணனாம் என ஏத்தித் தொழக் கவி நல்குகொடைக்
காரணனைக் கம்பனை நினைவாம் உள் களிப்புறவே.

3. நம் சடகோபனைப் பாடினையோ என்று நம்பெருமாள்
விஞ்சிய ஆதரத்தால் கேட்பக் கம்பன் விரைந்து உரைத்த
செஞ்சொல் அந்தாதி கலித்துறை நூறும் தெரியும் வண்ணம்
நெஞ்சு அடியேற்கு அருள் வேதம் தமிழ்செய்த நின்மலனே.

4. நாதன் அரங்கன் நயந்துரை என்ன நல் கம்பன் உன்தன்
பாதம் பரவி பைந்தமிழ் நூறும் பரிவுடனே
ஓதும்படி எனக்கு உள்ளம் தனையருள் ஓதரிய
வேதம் தமிழ்செய்த மெய்ப்பொருளே இதுஎன் விண்ணப்பமே.

## தன் சிறப்புப் பாயிரம்

மன்றே புகழும் திருவழுந்தூர் வள்ளல் மாறனை முன்
சென்றே மதுர கவிப்பெருமாள் தென்தமிழ்த் தொடையில்
ஒன்றே பதிகம் உரைத்தவன் பொன்அடியுற்று நின்றான்
என்றே பதிகம் பதிகம் அதாக இசைத்தனனே.

# சடகோபர் அந்தாதி

## நூல்

1. வேதத்தின் முன்செல்க மெய்யுணர்ந்தோர் விரிஞ்சன் முதலோர்
கோதற்ற ஞானக் கொழுந்தின்முன் செல்க குணம்கடந்த
போதக்கடல் எங்கள் தென்குரு கூர்ப் புனிதன் கவிஓர்
பாதத்தின் முன்செல்லுமே தொல்லை மூலப் பரஞ்சுடரே.

2. சுடர் இரண்டே பண்டு மூன்றாயின துகள், தீர்ந்துலகத்து
இடர் இரண்டாய் வரும் பேர்இருள் சீப்பன எம் பிறப்பை
அடர்இரண்டாம் மலர்த்தாள் உடையான் குருகைக்கரசன்
படர்இருங் கீர்த்திப்பிரான் திருவாய்மொழிப் பாவொடுமே.

3. பாவொடுக்கும் நுண் இசை ஒடுக்கும் பலவும் பறையும்
நாவொடுக்கும் நல் அறிவொடுக்கும் மற்றும் நாட்டப்பட்ட
தேவொடுக்கும் பரவாதச் செரு ஒடுக்கும் குருகூர்ப்
பூவொடுக்கும் அமுதத் திருவாயிரம் போந்தனவே.

4. தனமாம் சிலர்க்குத் தவமாம் சிலர்க்குத் தருமநிறை
கனமாம் சிலர்க்கு அதற்கு ஆரணமாஞ் சிலர்க்கு ஆரணத்தின்
இனமாம் சிலர்க்கு அதற்கு எல்லையுமாம் தொல்லை ஏர்வகுள
வனமாலை எம்பெருமான் குருகூர் மன்னன் வாய்மொழியே.

5. மொழிபல ஆயின செப்பம் பிறந்தது முத்தியெய்தும்
வழிபல வாயவிட்டு ஒன்றா அது வழுவா நரகக்
குழிபல ஆயின பாழ்பட்டது குளிர் நீர்ப்பொருநை
சுழிபல வாய் ஒழுகுங் குருகூர் எந்தை தோன்றலினே.

6. தோன்றா உபநிடதப்பொருள் தோன்றலுற்றார் தமக்கும்
சான்றாம் இவை என்றபோது மற்றென் பலகாலும் தம்மின்
மூன்றாயினவும் நினைந்து ஆரணத்தின் மும்மைத் தமிழை
ஈன்றான் குருகைப் பிரான் எம்பிரான் தன் இசைக்கவியே.

7. கவிப்பா அமுத இசையின் கறியொடு கண்ணன் உண்ணக்
குவிப்பான் குருகைப்பிரான் சடகோபன் குமரிகொண்கன்
புவிப் பாவலர் தம்பிரான் திருவாய்மொழி பூசுரர்தம்
செவிப்பால் நுழைந்துபுக்கு உள்ளத்துளே நின்று தித்திக்குமே.

8. தித்திக்கும் மூலத் தெளியமுதே உண்டு தெய்வமென்பார்
பத்திக்கு மூலப் பனுவற்கு மூலம், பவம் அறுப்பார்
முத்திக்கு மூலம் முளரிக்கை வாணகை மொய்குழலார்
அத்திக்கு மூலம் குருகைப்பிரான் சொன்ன ஆயிரமே.

9. ஆயிரம் மாமறைக்கும் அலங்காரம் அருந்தமிழ்க்குப்
பாயிரம் நாற்கவிக்குப் படிச்சந்தம் பனுவற்கு எல்லாம்
தாய்இரு நாற்றிசைக்குத் தனித்தீபம் தண்ணங்குருகூர்ச்
சேயிரு மாமரபும் செவ்வியான் செய்த செய்யுட்களே.

10. செய்ஒடு அருவிக் குருகைப்பிரான் திருமாலை நங்கள்
கைஒர் கனிஎனக் காட்டித் தந்தான் கழற்கே கமலம்
பொய்யோம் அவன்புகழ் ஏத்திப் பிதற்றிப் பித்தாய்த் திரியோம்
ஐயோ அறிதும் என்றே உபகாரத்தின் ஆற்றலையே.

11. ஆற்றில் பொதிந்த மணலின் தொகை அரு மாமறைகள்
வேற்றில் பொதிந்த பொருள்களெல்லாம் விழு மாக்கமலம்
சேற்றில் பொதி அவிழ்க்கும் குருகூரர் செஞ் சொற்பதிகம்
நூற்றில் பொதிந்த பொருள் ஒரு ஒருகூறு நுவல்கிலவே.

12. இலவே இதழுளவே முல்லை உள்ளியம்பும் மொழியும்
சிலவே அவை செழுந்தேனொக்குமே தமிழ்ச் செஞ்சொற்களால்
பலவேதமும் மொழிந்தான் குருகூர்ப் பதுமத்து இரண்டு
சலவேல்களும் உளவே அது காண்என் தனியுயிரே.

13. உயிர்உருக்கும் புக்கு உணர்வு உருக்கும் உடலத்தினுள்ள
செயிர் உருக்கொண்ட நம் தீங்கு உருக்கும் திருடித் திருடித்
தயிர் உருக்கும் நெய்யொடு உண்டான் அடிச் சடகோபன் சந்தோடு
அயிர் உருக்கும் பொருநல் குருகூர் எந்தை அந்தமிழே.

14. அந்தம் இலாமறை ஆயிரத்து ஆழ்ந்த அரும்பொருளைச்
செந்தமிழாகத் திருத்திலனேல் நிலத் தேவர்களும்
தந்தம் விழாவும் அழகும் என்னாம் தமிழார் கவியின்
பந்தம் விழா ஒழுகுங் குருகூர் வந்த பண்ணவனே.

15. பண்ணப் படுவனவும் உளவோ மறை என்று பல்லோர்
எண்ணப்படச் சொல் திகழச் செய்தான் இயலோடு இசையின்
வண்ணப் படைக்கும் தனித்தலை வேந்தன் மலர் உகுத்த
சுண்ணப் படர் படப்பைக் குருகூர் வந்த சொல்கடலே.

16. கடலைக் கலக்கி அமுதம் அமரர்க்கு அளித்தான் களித்தார்
குடலைக் கலக்கும் குளிர்சங்கினான் குறையா மறையின்
திடலைக் கலக்கித் திருவாய்மொழி எனும் தேனைத் தந்தான்
நடலைப்பிறப்பு அறுத்து என்னையும் ஆட்கொண்ட நாயகனே.

17. நாய்போல் பிறர்கடை தோறும் நுழைந்து அவர் எச்சில் நச்சிப்
பேய்போல் திரியும் பிறவியினேனைப் பிறவியெனும்
நோய்போம் மருந்தென்னும் நுண்திரு வாய்மொழி நோக்குவித்துத்
தாய்போல் உதவிசெய் தாய்க்கு அடியேன் பண்டென் சாதித்ததே.

18. சாதிக்குமே பர தத்துவத்தைச் சமயத்திருக்கை
சேதிக்குமே ஒன்று சிந்திக்குமே அதனைத் தெரியப்
போதிக்குமே எங்கும் ஓங்கிப் பொதுநிற்கும் மெய்யைப் பொய்யைச்
சோதிக்குமே உங்கள் வேதம் எங்கோன் தமிழ்ச்சொல் எனவே.

19. சொல் என்கெனோ முழுவேதச் சுருக்கென்கெனோ எவர்க்கும்
நெல் என்கெனோ உண்ணும்நீர் என்கெனோ மறை நேர்நிறுக்கும்
கல் என்கெனோ முதிர் ஞானக்கனி என்கெனோ புகல
வல் என்கெனோ குருகூர் எம்பிரான் சொன்ன மாலையையே.

20. மாலைக் குழலியும் வில்லியும் மாறனை வாழ்த்தலர் போம்
பாலைக் கடம்பகலே கடந்து ஏகிப் பணை மருதத்து
ஆலைக் கரும்பின் நரேல் என்னும் ஓசையை அஞ்சியம்பொன்
சாலைக் கிளி உறங்காத் திரு நாட்டிடம் சார்வார்களே.

21. சாரல் குறிஞ்சி தழுவும் பொழில்தளிர் மெல்லடித் தண்
மூரல் குறிஞ்சி நகைமுகம் நோக்கற்கு நீ முடுகும்
சூரல் குறிஞ்சி நெறி நினைதோறும் துணுக்கு எனுமால்
வாரல் குருகைப்பிரான் திரு ஆணை மலையவனே.

22. மலையாரமும் கடல் ஆரமும் பன்மா மணி குயின்ற
விலையாரமும் விரவுந் திரு நாடனை வேலைசுட்ட
சிலையார் அமுதின் அடிச் சடகோபனைச் சென்று இறைஞ்சும்
தலையார் எவர் அவரே எம்மை ஆளும் தபோதனரே.

23. போந்து ஏறுக என்று இமையோர் புகலினும் பூந்தொழுவின்
வேந்து அறு அடர்த்தவன் வீடே பெறினும், எழில்குருகூர்
நாம் தேறிய அறிவன் திரு வாய்மொழி நாளும் நல்கும்
தீந் தேறலுண்டு உழலும் சித்தியே வந்து சித்திக்குமே.

24. சித்தர்க்கும் வேதச்சிரம் தெரிந்தோர்கட்கும் செய்தவர்க்கும்
சுத்தர்க்கும் மற்றைத் துறை துறந்தோர்கட்கும் தொண்டு செய்யும்
பத்தர்க்கும் ஞானப் பகவர்க்குமே அன்றிப் பண்டுசென்ற
முத்தர்க்கும் இன்னமுதம் சடகோபன் மொழித்தொகையே.

25. தொகை உளவாயப் பனுவற்கெல்லாம் துறைதோறும் தொட்டால்
பகை உளவாம் மற்றும் பற்றுளவாம் பழ நான்மறையின்
வகை உளவாகிய வாதுளவாம் வந்த வந்திடத்தே
மிகை உளவாம் குருகூர் எம்பிரான்தன் விழுத்தமிழ்க்கே.

26. விழுப்பாரினி எம்மையார் பிறவித்துயர் மெய்உற வந்து
அழுப்பாது ஒழிமின் அருவினைகாள் உம்மை அப்புறத்தே
இழுப்பான் ஒருவன் வந்தின்று நின்றான் இள நாகுசங்கம்
கொழுப்பாய் மருதம் சுலாம் குருகூர் எம் குலக்கொழுந்தே.

27. கொழுந்தோடு இலையும் முகையும் எல்லாம்கொய்யும் கொய்ம்மகிழ்க்கீழ்
விழுந்து ஒடுவது ஒர் சருகும் பெறால் விறல் மாறனென்றால்
அழும்தோள் தளரும் மனம் உருகும் கூரையில்
எழுந்து ஓடவும் கருத்துண்டு கெட்டேன் இவ் இளங்கொடிக்கே

28. கொடி எடுத்துக்கொண்டு நின்றேன் இனிக் கொடுங்கூற்றினுக்கோ
அடி எடுத்துக்கொண்டென்பால் வரல் ஆகுங்கொல் ஆரணத்தின்
படி எடுத்துக்கொண்ட மாறன் என்றால் பதுமக் கரங்கள்
முடி எடுத்துக்கொண்ட அந்தணர் தாள் என் முடி எனவே.

29. என்முடி யாதெனக்கு யாதே அரியது இராவணன்தன்
பொன்முடியால் கடல் தூர்த்த வில்லான் பொருநைத்துறைவன்
தன்முடியால் அவன் தாள் இணைக்கீழ் எப்பொருளும் தழிஇச்
சொல் முடியால் அமுதக்கவி ஆயிரம் சூட்டினனே.

30. சூட்டில் குருகு உறங்கும் குருகூர் தொழுதேன் வழுதி
நாட்டில் பிறந்தவர்க்காளும் செய்தேன் என்னை நல்வினையாம்
காட்டில் புகுதவிட்டு உய்யக்கொள் மாறன் கழல் பற்றிப்போய்
வீட்டில் புகுதற்கும் உண்டே குறைமறை மெய்எனிலே.

31. மெய்யும் மெய்யாயது பொய்யும் பொய்யாயது வேறுபடுத்து
உய்யும் மெய்யாய உபாயம் வந்துற்றது உறுவினையைக்
கொய்யும் மெய் வாள் வலவன் குருகைக்கு அரசன் புலமை
செய்மெய்யன் தனக்கே தனித் தானன்பு செய்தபின்னே.

32. செய்யன் கரியன் எனத் திருமாலைத் தெரிந்துணர
வய்யம் கரியல்ல மாட்டா, மறை மதுரக் குருகூர்
அய்யன் கவி அல்லவேல் பிறவிக் கடலாழ்வது அல்லால்
உய்யும் வகையொன்றும்யான் கண்டிலேன் இவ் உயிர்களுக்கே.

33. உயிர்த்தாரையில் புக்குறு குறும்பாம் ஒரு மூன்றனையும்
செயிர்த்தார் குருகை வந்தார் திருவாய்மொழி செப்பலுற்றால்
மயிர்த்தாரைகள் பொடிக்கும் கண்கணீர் மல்கும் மாமறையுள்
அயிர்த்தார் அயிர்த்த பொருள் வெளியாம் எங்கள் அந்தணர்க்கே.

34. அந்தணர்க்கோ நல் அருந்தவர்க்கோ அறி யோகியராய்
வந்தவர்க்கோ மறம் வாதியர்க்கோ மதுரக் குழைசேர்
சுந்தரத் தோளனுக்கோ அவன் தொண்டர்கட்கோ சுடர்தோய்
சந்தனச் சோலைக் குருகைப்பிரான் வந்து சந்தித்ததே.

35. சந்தியும் சந்திப் பதமும் அவை தம்மிலே தழைக்கும்
பந்தியும் பல்அலங்காரப் பொருளும் பயிலுகிற்பீர்
வந்தியும் வந்திப்பவரை வணங்கும் வகையறிவீர்
சிந்தியும் தென்குருகூர் தொழுது ஆட்செய்யும் தேவரையே.

36. தேவரை ஏறிய மூதறிவாட்டியைச் சீரழித்தீர்
பூவரை ஏறிய கோதையுள்ளம் புகுந்தார் எவர்என்
றேவரை ஏறி மொழிகின்றபோது இயம்பிற்று இறைவர்
மூவரையோ குருகூரரையோ சொல்லும் முந்துறவே.

37. துறவாதவர்க்கும் துறந்தவர்க்கும் சொல்லவே சுரக்கும்
அறவா அவைஇங்கு ஓர்ஆயிரம் அந்தோ சிலர்போல்
மறவாதியர் சொன்ன வாசகமாம் மலட்டு ஆவைப்பற்றிக்
கறவாக் கிடப்பர் அங்கு என்பெறவோ தங்கள் கைவலிப்பே.

38. கைதலைப் பெய்து அரும் பூசலிட்டுக் கவியால் உலகை
உய்தலைச் செய்தலும் பொய்என்று மோசென்றுஅவ்வூர் அறிய
வைது அலைத்து ஏசுமோ குருகூர் என்னும் ஆறு அறியாப்
பைதலைக்கோகு உகட்டிட்டு ஏட்டில் ஏற்றிய பண்பினையே.

39. பண்ணும் தமிழும் தவம்செய்தன பழ நான்மறையும்
மண்ணும் விசும்பும் தவம்செய்தன மகிழ்மாறன் செய்யுள்
எண்ணும் தகைமைக்கு உரியமெய் யோகியர் ஞானம்என்னும்
கண்ணும் மனமும் செவியும் தமைசெய்த காலத்திலே.

40. காலத்திலே குருகூர் புக்குக் கைக் கொண்மினோ கடைநாள்
ஆலத்திலே துயின்றோர் கொண்டவை இரண்டாய மைந்த
கோலத்திலே முளைத்துக் கொழுந்தோடிக் குணங்கடந்த
மூலத்திலே செல்ல மூட்டிய ஞானத்து எம்மூர்த்தியே.

41. மூர்த்தத்தினை இம் முழு ஏழ் உலகு முழுகுகின்ற
தீர்த்தத்தினைச் செய்ய வேதத்தினைத் திருமால் பெருமை
பார்த்தற்கு அருளிய பாரதத்தைப் பணித்தானும் நின்ற
வார்த்தைக் குருகைப்பிரானும் கண்டான்அம் மறைப்பொருளே.

42. பொருளைச் சுவையென்று போவதெங்கே குருகூர்ப் புனிதன்
அருளைச் சுமந்தவள் கண்ணின் கடைதிறந்து ஆறுபட்டுக்
குருளைச் சுமந்து வெளிபரந் தோட்டரும் கொள்ளைவெள்ளம்
உருளைச் சுடர்மணித் தேரைஅந்தோ வந்து உதைக்கின்றதே.

43. வந்து அடிக்கொண்டேன கொங்கைள் மாறன் குருகைவஞ்சி
கொந்துஅடிக் கொண்ட குழலும் கலையும் குலைந்து அலைய
பந்து அடிக்குந்தொறும் நெஞ்சம் பறை அடிக்கின்றது என்றால்
செந்தடித் தன்ன மருங்கிற்கு உண்டோ நிற்கும் சிக்கனவே.

44. கனவாயினவும் துரியமும் ஆயவையும் கடந்து
மன வாசகங்களை வீசிய மாறனை மாமறையை
வினவாது உணர்ந்த விரகனை வெவ்வினையைத் தொலைத்த
சின வாரணத்தைக் குருகைக்கு அரசனைச் சேர்ந்தனமே.

45. சேராதன உளவோ பெருஞ்செல்வர்க்கு வேதம் செப்பும்
பேராயிரம் திண் பெரும்புயம் ஆயிரம் பெய்துளவத்
தாரார் முடிஆயிரம் குருகூர்ச் சடகோபன் சொன்ன
ஆரா அமுதம் கவி ஆயிரம் அவ் வரியினுக்கே.

46. அரிவ்ளை பொன்மகிழ் ஆமிழைக்கு ஈயும்கொல் அந்திவந்து
முரிவளை முத்தும் சினையும் மயங்க முறைசெறுத்து
வரிவளையும் அன்னமும் தம்மிலே வழக்காட வலம்
புரிவளை யூடறுக்கும் குருகூர் எம் புரவலனே.

47. புரை துடைத்துப் பெரும்பொய்யும் துடைத்துப் பிறர்புகலும்
உரை துடைத்து அங்குள்ளவூச றுடைத்தெம் முறுபிறவித்
துரை துடைத் தாட்கொண்ட தொண்டர் பிரான்துறை நீர்ப்பொருநை
கரை துடைக்குங் கடலே அன்பர் கால்சுவடே.

48. சுவடு இறக்கத் தொடர் ஆசைக் களிற்றைத் தொடர்ந்துஇரண்டு
கவடு இறக் கட்டிய பாசத் தனைக் கண் பரிந்து சங்கக்
குவடு இறக் குத்திய மாறப் பெயர்க்கொலை யானை நங்காய்
இவள் திறத்து ஒன்றும் படர் அந்தி வானம் இருள்கின்றதே.

49. இருளாய்ப் பரந்த உலகங்களை விளக்கும் இரவி
பொருளாய்ப் பரந்தது தான்பொது நிற்றலின் மற்றதுபோல்
மருளாய்ப் பரந்த மயக்கத் துயக்கற்ற மாறன் என்கோன்
அருளால் சமயமெல்லாம் பரன் உண்டென்று அறிவுற்றதே.

50. அறிவே உனைத் தொழுதேன் மற்றை ஆகம வாதியரைச்
செறிவேன் என ஒன்று சிந்தை செய்யாது செய்தாரையில்லா
நெறி வேத நின்றா நிலையுணர்ந்தோன் குருகூர் நிலத்தைப்
பிறிவேன் எனவும் எண்ணாதென்னை வீடு பெறுத்தினையே.

51. பெரும்பாக்கியம் உள்ள போதும் பிழைப்பும் உண்டேபிறர்பால்
வெறும்பாக் கிளத்தி மெலிகின்ற என்னை வினைகொடுபோய்
எறும்பாக்கிய தமியேனை அமரர்க்கும் ஏறவிட்டான்
குறும்பாக்கிய முப்பகை தவிர்த்து ஆண்ட குருகைமன்னே.

52. குருகூர் நகர் எம்பிரான் அடியாரோடும் கூடி அன்புற்று
ஒருகூரையில் உறைவார்க்கும் உண்டே எம்மையுள்ளும்சுற்றும்
இருகூர் வினையும் அறுத்து இறப்பார்க்கும் இயற்கை அவ்வூர்
அருகு ஊர் அருகில் அயல் அயலார்க்கும் அரியதன்றே.

53. அன்றாத அன்றிலையும் அன்று வித்து என்னை அன்னையுடன்
பின்றாத வண்ணம் எல்லாம் பின்றுவித்துப் பிறைக்கொழுந்தை
ஒன்றாத வண்ணம் உபாயம் இயற்றியது ஊழ்வினையே
வென்றான் குருகைப்பிரான் மகிழேயன்றி வேறில்லையே.

54. வேறே நமக்கிவன் அன்புடை மெய்யடியான் என்றுள்ளம்
தேறேன் எனலது தேறத்தகும் செந்தமிழ்ப் புலவர்க்கு
ஏறே எதிகளுக்கு இன்னமுதே ஏறி நீர்ப்பொருகை
ஆறே தொடர் குருகூர் மறையோர் பெற்ற ஆணிப்பொன்னே

55. பொன்னை உரைப்பது அப் பொன்னொடன்றேபுலமைக்கொருவர்
உன்னை உரைத்து உரைத்தற்கு உளரோ உயர் நாற்கவியும்
பின்னை உரைக்கப் பெறுவதல்லால் பெருந்தண் குருகூர்
தென்னை யுரைக்கும் இயற்கும் இசைக்கும் சிகாமணியே.

56. மணித்தார் அரசன் தன் ஓலையைத் தூதுவன் வாய்வழியே
திணித்தா ரழியச் சிதைமின் தலையை எம் தீவினையைத்
துணித்தான் குருகைப் பிரான் தமிழால் சுருதிப்பொருளைப்
பணித்தான் பணியன் றெனில்கொள்ளும் கொள்ளுமெம்
பாவையையே.

57. பாவைத் திருவாய்மொழிப் பழத்தைப் பசும் கற்பகத்தின்
பூவைப் பொருகடல் போதோ அமுதைப் பொருள் சுரக்கும்
கோவைப் பிணித்தஎம் கோவையல்லா என்னைக் குற்றம்கண்டென்
நாவைப் பறிப்பினும் நல்லர் அன்றோ மற்றை நாவலரே.

58. நாவலந் தீவில் கவிகள் எல்லாம் சில நாள்கழியப்
பூவலந் தீவது போல்வ அல்லால் குருகூர்ப்புலவன்
கேவலந் தீங்கு அறுப்பான் கவிபோல் எங்கும்போய்க்கெழுமிக்
கூவலந் தீம்புனலும் கொள்ளுமே வெள்ளம் கோளிழைத்தே.

59. இழைத்தார் ஒருவரும் இல்லா மறைகளை இன்தமிழால்
குழைத்தார் குருகையிற் கூட்டம்கொண் டார்க் குமரித்துறைவர்
மழைத்தார் தடக்கைகளால் என்னை வானின் வரம்பிடைநின்று
அழைத்தார் அறிவும் தந்தார் அங்கும் போயவர்க்கு ஆட்செய்வனே.

60. ஆட்செய்யல் ஆவதெல்லாம் செய்தடியடைந்தேன் அதன்றித்
தாட்செய்ய தாமரை என்தலை ஏற்றனன் தண்குருகூர்
நாட்செய்ய பூந்தோடை மாறனென்றேன் இனி நாள்குறித்துக்
கோட்செய்யல் ஆவதுண்டேயென்ற னாருயிர் கூற்றினுக்கே.

61. கூறப்படா மறையின் பொருள் கூறிக் குவலயத்தோர்
மாறப்படா வினை மாற்றிய மாறன் மகிழ் அலங்கல்
நாறப்படா நின்ற போதமுது ஆகும் அதன்றி நஞ்சம்
தேறப்படாது கெட்டேன்மன்றல் நாறும் தண் தென்றலையே.

62. தென்தலைத் தோன்றும் உபநிடதத்தை என் தீவினையை
நின்றலைத் தோன்றும் நியாய நெறியை நிறைகுருகூர்
மன்றலைத் தோன்றும் மதுரகவியை மனத்துள் வைப்பார்
என்தலைத் தோன்று எம்பிரான்கள் என் நாவுக் குரியவரே.

63. உரிக்கின்ற கோடலின் உந்துகந்தம் என ஒன்றுமின்றி
விரிக்குந்தோறும் வெறும் பாழாய் விடும்பிறர் புன்கவிமெய்
தெரிக்கின்ற கோச்சடகோபன் தன் தெய்வக் கவிபுவியில்
சுரிக்கின்ற நுண்மணல் ஊற்றொக்கும் தோண்டச் சுரத்தலினே.

64. சுரக்கும் திருவும் வறுமையும் தீரும் தொடக்கு விட்டுக்
கரக்கும் இருவினை மேன்மையும் காணும் கயல்குதிப்பத்
திரக்கும் கழைநெடுந் தாளில் தொடுத்த செந்தேனுடைந்து
பரக்கும் பழன வயல் குருகூர் வளம்படுமினே.

65. பாடும் கறங்கும் சிறைவண்டு பாடம் பைந்தாள் குவளை
தோடும் கறங்கும் குருகைப்பிரான் இச் சுழல்பிறவி
ஓடும் கறங்கன்ன வாழ்க்கையை நீக்கி உணர்வுதவி
வீடும் திறந்து தந்தானை எந்நான்றும் விடகிலமே.

66. விட அந்தகார வெம்பாலிற் பராங்குசர் மெல்லியலுக்கு
இடர் வந்ததால் என்றிரங்கிப் புணர்ந்திலர் இன்னுயிரை
அடவந்த காலன்கொலோ அறியேன் இன்று இவ் அந்திவந்து
பட அந்தகாரப் பெரும்புகையோடிப் பரக்கின்றதே.

67. பரவாது கேட்டினைப் பைய நட சுருதிப் பசுக்கள்
சுரவாதவற்றைச் சுரப்பித்து அவை சொரியும் பொருட்டால்
கரவாது உதவிய மாறன் கவி அனையாய் இனிஓர்
சரவாதம் இப்புறம் அப்புறம் காணத் தடம்பணையே.

68. தடம்பணைத் தண்பொருநைக் குருகூரர் தகை வகுள
வடம்பணைக் கொங்கையில் வைக்கின் றிலர்மற்றை மாலைஎல்லாம்
உடம்பு அணைக்குந்தொறும் வெந்துஉரும் ஐந்துவெம்பாம்பு உமிழ்ந்த
விடம்பணைக் கொண்டனவே பனி தோய்ந்திருள் மேகங்களே.

69. மேகத்தை ஆற்றல்கண்டேன் என்று எண்ணாதுமெய்யன்குருகூர்ப்
பாகத்தை ஆற்றும் சொல்லாளைக் கண்ணீரின் துளிபரந்த
மோகத்தை ஆற்றிக் கொண்டே கண்ட மாற்றம் ஒழிந்து சிந்தைச்
சோகத்தை ஆற்றிக் கொண்டே துளித் தூவத் தொடங்குவே.

70. தொடங்குகின்றான் நடம் சொல்லுகின்றேன் குருகூரர் தொழா
மடங்குகின்றாள் மண்டலம் சுற்றியாடுகிறாள் தங்கி
விடங்கு கண்டார் பிழைப்பார் சுவையீர் விரைந்து ஏகுமிந்த
படங்கு விண்டால்பின்னைப் போக ஒண்ணாது உம்பதிகளுக்கே.

71. பதியந்தமிழ் என்ன நான்மறை என்ன இப் பார்புரக்கும்
மதியந் தமிழ்ஒளி மாலைகள் என்ன மறை தமிழன்
அதியம் தரும் கவி ஆயிரம் செய்தளித்தான் அமுதம்
பொதியம் தரு நதியங்குருகூர் எந்தை பூசுரர்க்கே.

72. பூட்சி கண்டீர் பொய்ச் சமயப் புலவர்க்குப் போக்குவல்வாய்
வாட்சி கண்டீர் மற்றை மாயத்து அருகர்க்கு மன்உயிர்கட்கு
ஆட்சி கண்டீர் தொண்டர்க்கு ஆனந்தவாரி கண்டீர் அறிவைக்
காட்சி கண்டீர் பரவும் குருகூர் வந்த கற்பகமே.

73. கற்றும் செவியுறக் கேட்டும் பெருகிக் களித்தும் உள்ளே
முற்றும் உசுப்பெய்தும் மூழ்கிக் குடைந்தும் முகந்துகொடு
நிற்றும் நிலையுற நீந்துதும் யாம்நிதம் மாறன் எம்மை
விற்றும் விலைகொள்ளவும் உரியான் கவி வெள்ளைத்தையே.

74. வெள்ளம் பரந்தனவோ கமலத்தன்றி வெண்மதிமேல்
கள்ளம் பரந்தனவோ முயல் நீக்கிக் கவிக்கரசன்
தெள்ளம் பரந்த வயல்குரு கூர்க்கொம்பின் செம்முகத்தே
உள்ளம் பரந்தனவோ கண்களோ ஒன்றும் ஓர்கிலமே.

75. ஓரும் தகைமைக் குரியாரும் ஓங்கிய ஞானியரும்
சாரும் தனித் தலைவன் சடகோபன் தடம்பதிக்கே
வாரும் உமக்கொரு உறுதி சொன்னேன் மயக்கமெல்லாம்
தீரும் திருக்கு அறும் சிந்தைசெவ்வே நிற்கும் தீங்கறுமே.

76. அறுவகை யாய சமயமும் ஐவகைத் தாம்புலனும்
உறுவகையால் சொன்ன ஒட்டம் எல்லாம் ஒழிவித்தொருங்கே
பெறுவகை ஆறெனச் செய்த பிரான்குரு கூர்ப்பிறந்த
சிறுவகையார் அவரைத் தொழுதோம் எம்மைத் தீண்டுகவே.

77. தீண்டித் திருவடி யைப்பற்றிக் கொண்டு சிந்தித்ததையே
வேண்டிக் கொளப்பெற்றிலேன் வினையேன் இவ் வெறும்பிறவி
ஆண்டில் பிறந்த அக் காலத்திலே அன்பனாய் அணிநீர்ப்
பாண்டித் தமிழ்த்திரு நாட்டுருக் காட்டிய பாவகற்கே.

78. பாவகத்தால் தன் திருஅவதாரம் பதினொன்றென்றிப்
பூவகத்தார் அறியாத வண்ணம் தன்னையே புகழ்ந்து
நாவகத்தால் கவி ஆயிரம் பாடி நடித்தளித்த
கோவகத்தாற்கு அன்றி என்புறத்தார்செய் குற்றேவல்களே.

79. குற்றவேலும் செய்தும் மெய்கண்டு கைகொண்டுகும்பிட்டன்பு
பெற்றேன் என்போல் எவர் பேறுபெற்றார் பின்னையே பிறந்து
வெற்றேவலின் நின்ற பொய்யன்பர் தாங்களும்மெய்யுணர்ந்தார்
எற்றே குருகைப்பிரான் எம்பிரான் தனியலிசைக்கே.

80. இயலைத் தொடுத்து இன்னிசையைப் புணர்த்தெம்மையிப்பிறவி
மயலைத் துடைத்த பிரான் குருகூர் மதியைக் கொணர்ந்து
முயலைத் துடைத்துத் தனுவைப் பதித்து முத்தங்குயிற்றிக்
கயலைக் கிடத்திக்கொள் சாளரத்தூடு கதவிட்டதே.

81. இட்டத்திலும் தம்தம் உள்ளத்திலும் எண்ணிலும் இருப்பின்
கிட்டத்திலும் வலியாரும் உருகுவர் கேணியிலும்
பட்டத்திலும் பைந் தடத்திலும் ஒடைப் பழனத்திலும்
குட்டத்திலும் கயல்பாய் குருகூரர் குணங்களுக்கே.

82. குணம் வேண்டுமே நற்குலம்வேண்டுமே அக்குலத்தொழுக்காம்
பிணம் வேண்டுமே செல்வப்பேய் வேண்டுமே பெருந் தண்வகுள
மணம் வேண்டுந் தண் தெரியல் பெருமான் செய்யுள் மாமணியின்
கணம் வேண்டும் என்றறிவாரைக் கண்டால் சென்று கைதொழுமே.

83. தொழும்பாக்கிய வினைத் தொல்லைப் பிறவிச் சுழியிடை நின்று
எழும்பாக்கிய முடைத் தாக்கவும் தென்னிய லோடிசைந்த
கெழும்பாக் கெழுமிய கீர்த்தியை நாளும் கிளத்தி என்நாத்
தழும்பாக்கவும் வல்ல கோசடகோபன் தயாபரனே.

84. பரந்தலைக்கும் பொருநைக் குரு கூரென்னில் கண்பணிக்கும்
கரம்தலைக் கொள்ளும் உள்ளும்உருகும் கவியால் உலகைப்
புரந்தலைக்கும் வினை தீர்த்தான் புனைமகிழ் பூவுமன்றி
மரந்தலைக் கொள்ளவும் போதுநங்காய் உன்மகள் கருத்தே.

85. கருத்தில் கருணை வைத்தேகும் இதுவும் கலை மறையோர்
திருத்திற்று ஒருமணம் தீரும் நீரின் நிறை
முருத்தின் செருந்து அயலே இவளோடு முயற்கரும்பின்
குருத்தில் பிரசம் வைக்கும் குருகூர் சென்று கூடுமினே.

86. கூட்டங்கள்தோறும் குருகைப்பிரான் குணம் கூறும் அன்பர்
ஈட்டங்கள்தோறும் இருக்கப்பெற்றேம் இருந்து எம்முடைய
நாட்டங்கள்தோறும் புனல்வந்து நாலப் பெற்றேம் இனிமேல்
வீட்டு எங்கள் தோழர்க்கு என்றே பெருமுபோகம்விளைகின்றதே.

87. விளையா தொழிய மருந்தும் உண்டே எம் வினைதினையின்
கிளையாக் கிளா விளைகின்றதால் கிளையாம் பிறவித்
தளையாசு அழியத் தடுத்துத் தென்பாலை வழிதடுத்துக்
களை ஆசு அறத் தடுத்தாண்டான் குருகையின் காப்புனமே.

88. புனம்பாழ் படுத்துப் புகழ் படுத்த தல்லால் புகுந்தென்
மனம்பாழ் படுத்தனை வாழ்தியன்றே வழுவா நரகத்
தினம்பாழ் படுத்த பிரான் சடகோபனின்னாக் கலியின்
சினம் பாழ்படுத்த நின்றான் குன்று சூழ்கின்ற செந்தினையே.

89. தினைஒன்றிய குற்றம் அற்றுணர்ந்தோர் மகிழின் திறத்தின்
மனை ஒன்றிக் கொடியாள் துயின்றாலும் தன் வாய் அடங்கா
வினைஒன்றிய அன்றிலுக்கு இடம் காட்ட விரிதலையே
பனையன்றியும் உளதோ தமியேற்கப் பழம்பகையே.

90. பகையாய் வருகின்ற மூன்றையும் வேரினோடும் பறித்து
வகையாய் வருவன யாவையும் மாற்றி இவ் வையமுய்யத்
தொகை ஆயிரங்கவி சொன்னோன் பெயர் சொல்லச் சூழ்பனியின்
புகையாம் இருள் பின்னை எந்நாள் கழியப் புகுகின்றதே.

91. புகுகின்றது இருள் போகின்றது வண்ணம் பூவைகண்ணீர்
உகுகின்றதென்று உயிர் ஓய்கின்றதென்றால் உலக ஏழுமுய்யத்
தொகுகின்ற ஆயிரம் சொன்னோன் குருகைச் சொல்லால் விளங்கத்
தருகின்றனர் அல்லர் மேன்மேலும் காதல் தருமவரே.

92. தருமமும் காமமும் தாவில் அரும் பொருளுந் தணவாக்
கருமமும் ஆகிய காரணம் கண்ட அக் காரணத்தின்
பெருமையும் மாயப் பிணக்கும் தவிர்ந்துறு பேதம் செய்யும்
இருமையும் தீர்ந்த பிரான் சடகோபன் தன் இன்னருளே.

93. அருளில் சிலமகிழ் ஆயிழைக்கு ஈவர்கொல் அந்திவந்த
இருளில் பிறிது துயரும் உண்டோ இயலோடு இசையின்
பொருளில் சிறந்த அலங்கார வல்லியின் போக்கில் உள்ளம்
தெருளின் கரும்பு ஒக்கும் ஆயிரம் பாப்பண்டு செய்தவரே.

94. அவரே அயற்கும் அரற்கும் அல்லா அமரர்க்கும் எல்லாம்
பவரேகை யுற்று என்பிணி கொள்ளுமோ படர் நீரின் இட்ட
நவரேகை யுட்கொள்ளச் செய்ததல்லால் நம்பி மாறனைப்போல்
எவரே திருவாயிரம் மோக்க மாலை இசைத்தவரே.

95. தவம் செய்வதும் தழல் வேள்வி முடிப்பதும் தம்மை ஒறுத்து
எவன் செய்யும் மெய்யன் குருகைப்பிரான் எம்மை இன்னம் ஒரு
பவம் செய்கை மாற்றிய பண்டிதன் வண்தமிழ்ப் பாவும் உண்டே
அவம் செய்கை மாற்றச் செவியுண்டு நாவுண்டு அறிவுமுண்டே.

96. உண்டாட்டியலும் திருமால் உருவை உயர்த்துலகைத்
தொண்டாட்டிய வந்துதோன்றிய தோன்றல் துறைக்குருகூர்
நண்டாட்டிய நங்கை நாட்டங்களால் இந்த நாட்டையெல்லாம்
திண்டாட்டிய கண்கள்போல் செய்யுமோ கயல்தீங்குகளே.

97. தீயைக் கிழித்தொரு திங்கள் கொழுந்தெனச் செய்ததல்லால்
பேயைக் கிழித்தென அன்றில் பனை பிளவார் உளவாம்
நோயைக் கிழிக்கும் வகுள நல்கார் இந்த நுண்பிறவி
மாயைக் கிழியைக் கிழித்தெம்மை வாங்கிட வல்லவரே.

98. வல்லம் புலிமுக வாயில் கரும்பின் மறுபிறப்பைக்
கொல்லம் புலியோர் வகுளம் கொடார் கொடுங்கோகு கட்டிச்
சல்லம் புலியிட்டு எதிரிடப் பாய்வதுதா யென்றிங்கோர்
இல்லம் புலியும் உண்டு அம்புலி மீள எழுகின்றதே.

99. எழுதிய நாளும் வினையும் தொகுத்தெம்மை இப்பிறவிப்
புழுதியில் நாற்றிட்டு வைப்பரிதால் புகழ் மெய்ப்புலவோர்
தொழுதியல் நாயகன் ஓதும் கனல்துறை நீர்ப்பொருநை
வழுதி நன்னாடன் திருவாய்மொழி எம் மனத்தனவே.

100. மனையும் பெருஞ்செல்வமும் மக்களும் மற்றை வாழ்வும்தன்னை
நினையும் பதம் என நின்ற பிரான் குருகூர் நிமலன்
புனையும் தமிழ்க்கவியால் இருள் நீங்கிப் பொருள் விளங்கி
வினையும் திரிவுற்றன குற்றம் நீங்கின வேதங்களே.

முற்றும்



# வைணவ அந்தாதி இலக்கியங்கள்

| எண் | நூல் | ஆசிரியர் |
|---|---|---|
| 1. | அழகர் அந்தாதி | வில்லிபுத்தூரார் |
| 2. | அரங்கத்து இதழ்கல் அந்தாதி | தண்டபாணி சுவாமிகள் |
| 3. | அரங்கராமானுச நூற்றந்தாதி | சீனிவாச்சாரியார் |
| 4. | அரிகிருஷ்ண அந்தாதி | வேலாயுதபாணி |
| 5. | அழகர் அந்தாதி | பிள்ளைப் பெருமாள் அய்யங்கார் |
| 6. | அரங்கத்தந்தாதி | பிள்ளைப் பெருமாள் அய்யங்கார் |
| 7. | அனுமான் அந்தாதி | சேனவய்யர் |
| 8. | ஆழ்வார் அந்தாதி | கம்பர் |
| 9. | இரண்டாம் திருவந்தாதி | பூதத்தாழ்வார் |
| 10. | இராமநுச நூற்றந்தாதி | திருவரங்கத்தமுதனார் |
| 11. | இலக்குமி அந்தாதி | கம்பர் |
| 12. | இலக்குமி அந்தாதி | கருப்பையா பாவலர் |
| 13. | இலக்குமி அந்தாதி | பொன்னையா முதலியார் |

| எண் | நூல் | ஆசிரியர் |
|---|---|---|
| 14. | எதிராயர் அந்தாதி | பிள்ளைப் பெருமாள் ஐயங்கார் |
| 15. | குடந்தை அந்தாதி | மீனாட்சி சுந்தரம்பிள்ளை |
| 16. | குருவாயூரப்பன் கலித்துறையந்தாதி | இராமன், மு.கோ. |
| 17. | குருவாயூரப்பன் வெண்பாயந்தாதி | இராமன், மு.கோ. |
| 18. | சங்கரன் பாதி நாராயணன் பாதி அந்தாதி | திருவாசகமணி பாலசுப்பிரமணியம் |
| 19. | சடகோபரந்தாதி | கம்பர் |
| 20. | சடகோபர் சதகத்தந்தாதி | தண்டபாணி சுவாமிகள் |
| 21. | சேடகிரி அந்தாதி | பள்ளிகொண்டான் பிள்ளை |
| 22. | சேடமலை பதிற்றுப்பத்தந்தாதி | இராமானுசப் பிள்ளை |
| 23. | திரு எவ்வுள் பதிற்றுப்பத்தந்தாதி | இராமன், மு.கோ. |
| 24. | திருகச்சி வரதர் அந்தாதி | நாராயணசாமிப் பிள்ளை |
| 25. | திருகடன்மல்லைப் பதிற்றுப்பத்தந்தாதி | வரதராசர் |
| 26. | திருக்குடந்தை அந்தாதி | கனகசபை நாயக்கர் |
| 27. | திருக்குடந்தைத் திரிபந்தாதி | மீனாட்சி சுந்தரம் பிள்ளை |
| 28. | திருக்குடந்தைப் பதிற்றுப் பத்தந்தாதி | கும்பநாத செட்டியார் |

| எண் | நூல் | ஆசிரியர் |
|---|---|---|
| 29. | திருக்குருகூர் மாறனந்தாதி | பெரிய திருவடி கவிராயர் |
| 30. | திருக்கோட்டியூர்திரிபந்தாதி | கருப்பையா பாவலர் |
| 31. | திருக்கோவிலூர் திரிவிக்ரமர் பதிற்றுப்பத்தந்தாதி | மணவாளதாசன் |
| 32. | திருக்கோட்டியூர் பதிற்றுப் பத்தந்தாதி | சுப்பாநாயகர் பரதன் |
| 33. | திருநாகைத் திரிபந்தாதி | கிருஷ்ணமாச்சாரியார் |
| 34. | திருப்பதி அந்தாதி | சேதுரவிராமன் என்.வி. அண்ட் நாராயணன், மு. |
| 35. | திருப்பதி அழகரந்தாதி | வேலாயுத முதலியார், தொழுவூர் |
| 36. | திருப்பதி இடுக்கை அந்தாதி | நரசிம்மலு நாயுடு |
| 37. | திருப்பார்த்தசாரதி அந்தாதி | நரசிம்மலு நாயுடு |
| 38. | திருப்புல்லாணி மழை வசியந்தாதி | தெய்வநாயகப் பெருமாள் நாயுடு |
| 39. | திருப்புல்லைத் திரிபந்தாதி | கிருஷ்ணமாச்சாரியார் |
| 40. | திருமகளந்தாதி | தண்டபாணி சுவாமிகள் |
| 41. | திருமகளந்தாதி | எஸ்.எஸ். சிதம்பரம் |
| 42. | திருமழிசைப் பதிற்றுப் பத்தந்தாதி | வரதராசப் பிள்ளை |
| 43. | திருமாறன் யமக அந்தாதி | தெய்வநாயகப் பெருமாள் நாயுடு |

| எண் | நூல் | ஆசிரியர் |
|---|---|---|
| 44. | திருமாறன் யமக அந்தாதி | கிருஷ்ணமாச்சாரியார் |
| 45. | திருமுட்டப் பதிற்றுப்பத்தந்தாதி | அழகியமணவாள ராமானுசர் |
| 46. | திருவரங்கத்தந்தாதி | பிள்ளைப்பெருமாள் ஐயங்கார் |
| 47. | திருவரங்கப் பதிற்றுப் பத்தந்தாதி | பிள்ளைப் பெருமாள் ஐயங்கார் |
| 48. | திருவரங்கப் பதிற்றுப் பத்தந்தாதி | வெங்கடாசல நாதர் |
| 49. | திருவல்லிக்கேணி அழகரந்தாதி | பாலகிருஷ்ண நாயுடு. |
| 50. | திருயமகவந்தாதி | இராமசாமி நாயகர் |
| 51. | திருவனந்தபுரம் யமகவந்தாதி | தண்டபாணி சுவாமிகள் |
| 52. | திருவாய்மொழி அந்தாதி | தண்டபாணி சுவாமிகள் |
| 53. | திருவாய்மொழி நூற்றந்தாதி | மணவாளமாமுனிகள் |
| 54. | திருவாய்மொழி நூற்றந்தாதி | வேலுப்பிள்ளை |
| 55. | திருவெவ்வுளூர் வீரராகவப் பெருமாள் அந்தாதி | சுப்பராயணசாமி நாயுடு |
| 56. | திருவெவ்வுளூரந்தாதி | நாராயணசாமிப் பிள்ளை |
| 57. | திருவெவ்வுளூர்த் திரிபந்தாதி | கிருஷ்ணமாச்சாரியார் |
| 58. | திருவேங்கடத்தந்தாதி | பிள்ளைப் பெருமாளை யங்கார் |

| எண் | நூல் | ஆசிரியர் |
|---|---|---|
| 59. | திருவேங்கடமுடையான் பதிற்றுப் பத்தந்தாதி | அப்புவையங்கார் |
| 60. | தேசிக நாராயணர் திருவந்தாதி | மணவாள சுவாமி |
| 61. | நான்முகன் திருவந்தாதி | திருமழிசையாழ்வார் |
| 62. | நூற்றெட்டுத் திருப்பதி அந்தாதி | பிள்ளைப் பெருமாளை யங்கார் |
| 63. | நூற்றெட்டுத் திருப்பதி அந்தாதி | மணவாளதாசர் |
| 64. | நூற்றெட்டுத் திருப்பதி அந்தாதி | அந்தாதி தாதாரியர் தொண்டன் |
| 65. | பிள்ளையந்தாதி | சிவசூரியம் பிள்ளை |
| 66. | பிள்ளையந்தாதி | நயினாராசாரியார் |
| 67. | பிள்ளையந்தாதி | வெங்கட வீரராகவாசாரியார் |
| 68. | புல்லையந்தாதி | வெங்கட வீரராகவாசிரியார் |
| 69. | புல்லைப் பதிற்றுப்பத்தந்தாதி | வெங்கட வீரராகவாசிரியார் |
| 70. | பெரிய திருவந்தாதி | திருமழிசையாழ்வார் |
| 71. | பெரிய திருவந்தாதி | நம்மாழ்வார் |
| 72. | மணவாள மாமுனி நூற்றந்தாதி | அனந்தாழ்வார் |
| 73. | மணவாள மாமுனி நூற்றந்தாதி | கிருஷ்ணமாச்சாரியார் |

| எண் | நூல் | ஆசிரியர் |
|---|---|---|
| 74. | மணவாள மாமுனி நூற்றந்தாதி | பிள்ளைப் பெருமாள் அய்யங்கார் |
| 75. | மணவாள மாமுனி நூற்றந்தாதி | வேங்கடராமனுதாசர் |
| 76. | மணவாள மாமுனி நூற்றந்தாதி | வேங்கடராமனுதாசர் |
| 77. | மகரநெடுங்குழைக் காதர் அந்தாதி | நடராச தீட்சிதர் |
| 78. | மாருதி அந்தாதி | என்.எஸ். சிதம்பரம் |
| 79. | முதல் திருவந்தாதி | பேயாழ்வார் |
| 80. | மூன்றாம் திருவந்தாதி | பொய்கையாழ்வார் |
| 81. | வைணவி அந்தாதி | பொய்கையாழ்வார் |
| 82. | ஜீயர் அந்தாதி | பொய்கையாழ்வார் |
| 83. | ஜீயர் நூற்றந்தாதி | சேனாபதி முனிவர் |
| 84. | ஸ்ரீ கிருஷ்ண அந்தாதி | கண்ணதாசன் |
| 85. | ஸ்ரீ ரங்கம் இதழகல் அந்தாதி | தண்டபாணி சுவாமிகள் |
| 86. | ஸ்ரீ ரங்கம் திருமகளந்தாதி | தண்டபாணி சுவாமிகள் |
| 87. | ஸ்ரீ வில்லிபுத்தூர்க் கோதையந்தாதி | அழகிய சொக்கநாத பிள்ளை |

# கம்பரின் கைவண்ணமும் சடகோபர் அந்தாதியும்



அருட்கவிஞர் அ. காசி எம்.ஏ., எம்.எட்.,